மார்பிலே கைவைத்துறங்குமத்தனையன்றோ வென்று கருத்து “అచిన్త్యస్స్యాద్ఘృణా-அசிந்த்யபலத்வாஞ்சௌ” இத்யாதி “ప్రపద్య త్వామద్య - ப்ரபத்ய த்வாமத்ய” இத்யாதி (௨௧)

(அ-கை) ‘என்னைப்பயமாற்றுகைக்கே” என்பதி பப்யான விவக்ஷை “అస్మద్గురుదయాయాతయతీన్ద్రాఙ్ఘ్రిద్వయాన్వయః-அஸ்மத்குருதயாயாதயதீந்த்ராங்க்ரியாந்வய:” என்கிறபடியே பிள்ளையுடைய நிர்ஹேதுக கருணையாலே எம்பெருமானாருடைய அபிமாநநாவாரூடனாய் ஸம்ஸாரஸமுத்திரத்தைக் கடந்து, ஸ்ரிய:பதியுடைய ஸ்ரீபாதகமலத்தை ப்ராப்பேனென்று நிஸ்சயிக்கிறார்

தீதற்றஞானத் திருவாய்மொழிப்பிள்ளை சீரருளால்
ஏதத்தைமாற்றுமெதிராசர் தம் அபிமானமென்னும்
போதத்தையேறிப் பவமாம் புணரிதன்னைக்கடந்து
கோதற்றமாதவன் பாதக்கரையைக் குறுகுவனே (௨௨)

தீதற்ற=குற்றமற்ற, ஞான=ஆத்மஜ்ஞாந குணங்களையுடைய, திருவாய்மொழிப்பிள்ளை=திருமாலவன் கவியான திருவாய்மொழியிலே அவகாஹநத்தை யுடையராகையாலே அத்தையிட்டு நிரூபிக்கும்படியான வாதிக்யத்தை யுடையரான பிள்ளையுடைய, சீரருளால் = நிர்ஹேதுக கருணையாலே, ஏதத்தை=காமாதி தோஷங்களை, மாற்றும்=போக்கடிக்கிற எதிராசர்=எதிகளுக்கு நாதராயிருக்கிற எம்பெருமானாருடைய, அபிமானமென்னும்=அபிமானமென்கிற, போதத்தை ஏறி=நிரபாயமான விஷ்ணுபோதம் போன்ற வைஷ்ணவக் கப்பலையேறி, பவமாம் புணரிதன்னைக்கடந்து=ஸம்ஸாரமாகிற பெருங்கடலைக் கடந்து, கோதற்றமாதவன் பாதக்கரையை= ‘விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ்” என்றும், ‘துயரறுசுடரடி” என்றும் சொல்லுகிறபடியே, அகிலஹேயப்ரத்யநீகமாய் நிரவதிக தேஜோரூபமாய், பரமப்ராப்யமாயிருக்கிற ஸ்ரிய:பதியினுடைய திருவடிகளாகிற தீரத்தை, குறுகுவனே = கிட்டப்பெறுவேன் ஏ = பாதபூரணம் (௨௨)

(வ-ம) (க)“తద్జ్ఞానమజ్ఞానమతోఽన్యదుక్తమ్-தத்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்” என்றும், (உ)“విద్యాన్యా శిల్పనైపుణమ్-வித்யாந்யா ஸில்பநைபுணம்” என்றுஞ் சொல்லுகிறபடியே, பகவத்யபரமாம குற்றமற

---

(க) வி பு (உ) வி பு

றிக்கே, (௧) 'தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே ஶ்ரிய:பதியை விஷயமாக வுடைத்தாய் அத்தான ததீயபர்யந்தமாயிருக்கிற ஜ்ஞாநத்தையுடையராய், அதுக்குமேல் வறை முந்நூலான ஆர்ஷவசநங்களைத் தருணவக்கரித்துத் திருமால வன் கவியான திருவாய்மொழியிலே அவகாஹநத்தையுடையவரா கையாலே, அதுக்கையிட்டு நிரூபிக்கும்படியான வாதிக்யத்தையுடை யரான பிள்ளையினுடைய நிர்ஹேதுக கருணையினாலே, *காமாதி தோஷஹராய யதிகளுக்கு நாதராயிருக்கிற எம்பெருமானார் தம் முடைய வழி(ஃ)மாற்றுருபமாயிருப்பதாய், "ఇదంహి వైష్ణవంపోతంసమ్యగాస్తే భవార్ణవే - இதம்ஹி வைஷ்ணவம்போதம்ஸம்யக்சாஸ்தே பவார்ணவே" என்கிறபடியே நிர்பாயமான விஷ்ணுபோதம்போன்ற வைஷ்ணவ போதத்தை யாரோஹித்து, "సంసారసాగరంఘోరమ్-ஸம்ஸாரஸாகரம் கோரம்' என்று சொல்லப்படுவதான ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத் தைக் கடந்து, (௨)"விண்ணோர்பிரானார் மாசில்மலரடிக்கீழ்" என்றும் (௩) "துயரறு சுடரடி' என்றுஞ் சொல்லுகிறபடியே ஹேயப்ரத்யநீக மாய், நிரவதிகதேஜோரூபமாய், வேறொருப்ராப்யாந்தரத்தை யபே க்ஷிக்கும்படியான கோதின்றிக்கேயிருக்கிற, ஶ்ரிய:பதியினுடைய திருவடிகளாகிற தீர்த்தத்தைக்கிட்டப்பெறுவன் இந்நிச்சயம்

பிராட்டி கடாக்ஷத்துக்கு விஷயமானபின்பு, திருவடி(௪)"రామస్య లోకత్రయనాయకస్య శ్రీపాదమూలంమనసాజగామ-ராமஸ்யலோகத்ரயநாயகஸ்ய ஶ்ரீபாதமூலம்மநஸா ஜகாம" என்று அடைந்ததாக வத்யவஸித்ததாயிறே (ரு) "மானேய நோக்கிமடவாளை மார்பில்கொண்டாய மாதவா' என்றுதொடங்கி "உன்தேனேமலரும் திருப்பாதம்-வினையேன் சேருமாறு நீயருளாய்" என்றார்த்திக்கவேண்டிற்றிறே "கோதற்றமாதவன்" என்று சொற்றுகையாவது அவனுக்கு விசேஷண மானபோது பிராட்டியோடே கூடியிருக்கையாலே, திருவில்லாத கோதற்றவனென்றுமாம், ஶ்ரிய:பதியிறே நித்யப்ராப்யனுவான

(அ-கை) கீழிரண்டுபாட்டாலும் ஸ்வாசார்ய பரமாசார்யர்க ளான பிள்ளையுடையவும் எம்பெருமானாருடையவும் அபிமானத

---

(௧) ௧ திருவ-௬௭ (௨) திருவிரு ௫௪ (௩) தி-வாய்-௧ ௧-௧

(௪) (ரு) தி-வாய் ௧-௫ ௫

த்தாலே பேறு தப்பாதென்று நிச்சயித்து, இப்படி நிச்சிதமானபின்பு (க) "வடிவுடைமாதவன்" என்னும்படி புதுக்கணிப்போடே ஸபரிகரனாய், திவ்யாஸ்தான மண்டபத்திலே திவ்யஸிம்ஹாஸனத்திலே திவ்யமஹிஷீபரிவ்ருதனாயெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாராயணனான ஸ்ரீவைகுண்டநாதனைக் கண்டு அனுபவிக்கும்படி எனக்கு யதிராஜனே பண்ணியருளவேணுமென்கிறார்

அடியார்கள் குழாங்கள் அழகோலக்கமிருக்க
  ஆனந்தமயமான மாமணி மண்டபத்துப்
படியாதுமில் படுக்கையாயிருக்கு மனந்தன்
  பணாமணிகடம்மி னொளிமண்டலத்தி னிடையில்
வடிவாரு மாமலராள் வலவருகுமற்றை
  மண்மகளு மாய்மகளு மிடவருகு மிருக்க
நடுவாக வீற்றிருக்கும் நாரணனைக் கண்டு
  நானனுபவிக்கும் வகை நல்கென்னெதிராசா (௨௩)

என்னெதிராசா = அடியேனுக்கு ஸ்வாமியாய யதிகளுக்கு நாதரானவரே! அடியார்கள் குழாங்கள் = நித்யமுக்த பகுந்தங்கள், (அநந்த கருட விஷ்வக்ஸேந ப்ரமுகரான நித்யவர்க்கமும், பராங்குச பரகால யதிவராதிகள் தொடக்கமான முக்தவர்க்கமும், மணிகளையும் முத்துக்களையும் நிறைத்தாற்போலே) அழகோலக்கமிருக்க = அழகோலக்கமாக வரிசையுடனே ஸேவித்திருக்க, ஆனந்தமயமான மாமணிமண்டபத்து = நிரதிசயானந்தஜநகமான திருமாமணி மண்டபத்திலே, படியாதுமில் = உபமானம் ஒன்றுமில்லாமலிருப்பதான, படுக்கையாயிருக்கும் = திவ்யபர்யங்கமாயிருக்கும், அநந்தன் = திருவநந்தாழ்வானுடைய, பணாமணிகள் தம்மினொளி மண்டலத்தினிடையில் = பணாரத்நங்களின் தேஜோ மண்டலத்தின் நடுவே, வடிவாரு மாமலராள் = "வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கை" என்கிறபடியே, ஸௌந்தர்யத்தால் மிக்கவளாகுமாயதையிட்டு நிரூபிக்கும் படியான பெரியபிராட்டியார், வலவருகும் = வலத்துப்பக்கத்திலும், மற்றை மண்மகளுமாய் மகளும் = இதரரான பூமிப்பிராட்டியும், நீளாதேவியும், இடவருகும் = இடத்துப்பக்கத்திலும், இருக்க = ஸேவித்திருக்க, நடுவாக வீற்றிருக்கும் = இவர்களுக்கு நடுவே மூன்று மின்கொடிகளோடே கூடி தாமரை பூத்ததொரு காளமேகம்போலே *வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல வெழுந்தருளியிருக்கிற, நாரணனை = ஸ்ரீவைகுண்ட

(க.

ஸமுதாயமாயிருப்பதாயிருக்கிற விநஸ்தூலஶரீரத்தை உபேக்ஷி யோடே (௧) 'மங்கவொட்டு' என்றுபஜீத்து (௨) "மன்னுங்கடுங்கதிரோன்மண்டலத்தின்னன்னடுவுள்ளன்னதோரில்லியினூடுபோய்" என்கிறபடியே, அவன் மண்டலத்தைக்கீண்டு அவ்வருகே போய், மற்று மாதிவாஹிகபுருஷர்களாயுண்டானவர்கள் லோகங்களெல்லாங்கடந்து, (௩) இமையோர்வாழ்தனிமுட்டை கோட்டையாய், கோடி யோஜனமான வளப்பத்தை யுடைத்தான அண்டகபாலத்தைப்பேதித்து, அதனையொருபடிக்கழித்து, மதயேயுண்டான தஶோத்தரமான ஆவரணஸப்தகத்தையுங்கடந்து, அவ்வருகேபோய் முடிவில் பெரும்பாழான மூலப்ரக்ருதியையுங்கடந்து அத்யந்த ரமணீயமாயிருப்பதாய் விரஜையென்று ப்ரஸித்தமான வந்நதியிலே ஸ்நாநம்பண்ணி, அவ்விடத்தில் அமானவகர ஸ்பர்ஶத்தாலே (௪) "ஒளிக்கொண்டசோதியுமாய்" என்னும்படி பஞ்சோபநிஷன்மயமாகையாலே, நிரவதிக தேஜோரூபமான திவ்யவிக்ரஹத்தையும்பெற்று, (௫) "முடியுடை வானவர் முறைமுறையெதிர்கொள்ள" என்கிறபடியே, நித்யஸூரிகள் ப்ரத்யுத்கதராய், ப்ரஹ்மாலங்காராதிகளாலே அலங்கரித்து, ஸத்காரத்திரம்பண்ணிக்கொண்டு வழிநடத்தப்போய், ஸ்ரீவைகுண்டமாகிற திவ்யநகரத்தை ப்ரவேஶித்து, பெருந்தெருவாலே யுள்ளே போய், ஆநந்தமயமான திருமாமணிமண்டபத்தைக்கிட்டிச்சென்று, (௪) "அடியார்கள்குழாங்களுடன் கூடுவதென்றுகொலோ!" (௬) ஸத்3தை:பரிஜநை ஸ்தவஸங்கி3ஷீய- மத்தேவை:பரிஜநைஸ்தவஸங்கிஷீய" என்கிறபடியே, நமக்கு ஸ்வாமிகளாய், ஶ்ரிய:பதியினுடைய திருவடிகளிலே ந்யஸ்தபரராய், அதுவே நிரூபகமாயிருக்கிற ஸூரிஸங்கங்களுடன் கூடுகிற வந்தத்திவஸமானது (௭) "குறுகும்வகையுண்டுகொலோ" என்கிறபடியே, அதனை யபேக்ஷிக்கிற வெனக்கு அது ஸமீபமாம் ப்ரகாரமுபகரித்தருளவேணும் இவ்விடத்தில் நல்கல் = கொடுத்தல் (௨௪)

(அ-கை) நீரோ, உம்முடைய வபராதம் பாராமல் கனத்தப் பேற்றை வபேக்ஷியாநின்றீர், அதுக்கு நாம்செய்வதென்னென்று,

---

(௧) தி-வாய்-௧0-௭-௧0 (௨) பெரியதிருமடல் (௩) தி-வாய்-௧0-௯-௮
(௪) தி-வாய் ௨ ௩-௧0 (௫) தி-வாய்-௧0 ௯
(௬) -௭த (௭) தி-வாய் ௯ ௮-௧

எம்பெருமானார்க்கு மிகவாக, அடியேனை வங்கீகரித்தவன்று தொடங்கி இன்றளவும் வரவடியேனுடைய வபராதங்களையும் பொறுத்து, உபேக்ஷியாதே மோக்ஷத்தையும் கொடுப்பாராக வெண்ணியிருக்கிற தேவர் காலவிளம்பம் பண்ணுமலத்தைச் செய்தருளவேணுமென்கிறார்

என்றுநிர்ஹேதுகமா யென்னையபிமானித்து
யானுமதறிந் துனக்கேயாயிருக்கும் வகைசெய்தாய்
அன்று முதலின்றளவு மநவரதம் பிழையே
யடுத்தடுத்துச்செய்வ தநுதவிப்ப தினிச்செய்யேன்
என்றுன்னை வந்திரப்பதா மென் கொடுமைகண்டு
மிகழாதே யிரவுபக லடிமைகொண்டு போந்தாய்
இன்றுதிருநாடு மெனக்கருள வெண்ணுகின்றாய்
இனிக்கடுக்கச்செய்தருள வேண்டுமெதிராசா (௨௫)

எதிராசா = யதிகளுக்கு நாதரான எம்பெருமானாரே! என்று = எந்தத் தினத்தில், நிர்ஹேதுகமாக = நிர்ஹேதுகமாக-காரணமின்றி, என்னை = அடியேனை, அபிமானித்து = இவன் நம்முடையவனென்று அபிமானித்தருளி, யானும் = அடியேனும், அதறிந்து = அந்த அபிமானவிசேஷத்தை யறிந்து, உனக்கே = தேவருக்கே, ஆயிருக்கும் = அநந்யார்ஹ சேஷமாயிருக்கத் தக்க, வகை = ப்ரகாரத்தை, செய்தாய் = செய்தருளினீரோ? அன்றுமுதல் = அந்தத் தினந்தொடங்கி, இன்றளவும் = இந்நாளவரையிலும், (பூர்வவாஸனை விடாமல்) அநவரதம் = நிரந்தரம், பிழையே = அபராதமே, அடுத்தடுத்து = இடைவிடாமல், செய்வது = செய்துவிட்டு-இப்படிச்செய்தோமேயென்று, அநுதவிப்பது = அநுதபிப்பது, (அநுதபித்து) இனி = இனிமேல், செய்யேனென்று = செய்யமாட்டேனென்று, உன்னை = தேவரீரை வந்து இரப்பதாம் = வந்து ப்ரார்த்திப்பதாகிற என் கொடுமைகண்டும் = அடியேனுடைய க்ரூரக்ருத்யங்களைக்கடாக்ஷித்தும், இகழாதே = உபேக்ஷியாமல், இரவுபகல் = திவாராத்ரமும், அடிமைகொண்டுபோந்தாய் = தேவர் திருவடிகளில் கைங்கர்யங்கொண்டருளினீர், (இம்மாத்ரமேயல்லாமல்) இன்று = இன்றையதினம், திருநாடும் = பரமபதத்தையும் எனக்கு = அடியேனுக்கு, அருள = க்ருபைசெய்ய, எண்ணுகின்றாய் = திருவுள்ளம் பற்றியருளுகிறீர் (இப்படி அபாரகருணாஸமுத்ரதியுடையராகையாலே) இனிக்கடுக்க = இனிஶீக்ரமாக, செய்தருளவேணும் = அதைக் க்ருபை செய்தருளவேணும் (௨௫)

(வ-ர) யதிகளுக்கு நாதரான தேவரீர் வாதமாலை என்று நிர்ஹேதுகமாக, இவன் நம்முடையவனென்று அபிமானித்தருளி அடியேனும் அந்த வபிமானவிசேஷத்தை யறிந்து, தேவர்க்கே அநந்யார்ஹனாயிருக்கும்படி செய்தருளிற்று அப்படியே அபிமானித்தருளினவன்று தொடங்கி தேவர் திருவடிகளைப் பற்றிக்கிருக்கிற வின்றளவும், நிரந்தரமபராதமே இடைவிடாமல் செய்வது இப்படி அக்ருத்யமானவற்றைச் செய்தோமென்று அநுதபிப்பது இனி இப்படிப்பட்ட வபராதங்களைச் செய்யேனென்று, தேவரை "யாத்திப்பதாகிற வென்னுடைய கைங்கர்யங்கண்டு உபேக்ஷியாமல் இங்கும் திவாராத்ரவிபாசமற தேவர் திருவடிகளில் கைங்கர்யம் கொண்டருளினீர் அவ்வளவுமின்றிக்கே இன்றுலத்துக்களுக்கு க(ம)ங்கவ யபூமியான திருநாட்டையும் துச்சு போகப்பதயில்லாத வெனக்கு பரலாதிப்பத்யாகவிச்சித்தருளாநின்றீர் இப்படி செய்யவேண்டி யற்ற பின்புகாலக்கழிவு செய்யாமல் கடுக்க செய்தருளவேணும்

(அ-ரை) இவர் தம்மை வங்கிகரித்தவன்று தொடங்கி இன்றளவாக உண்டான வபராதஸஹத்வாதிகளை யாவிஷ்கரித்தவாறே, நம்மையொழிய வேறொருவர் இவர் குற்றங்களைப் பொறுத்துரக்ஷிக்க வல்லாருண்டோ? இனி இவர்க்கு மேலுண்டான கார்யமும் நாமே செய்து தீக்கட்டவேணுமென்று, எம்பெருமானாரத் நினைவாக, பா(ஞ)வஜ்ஞானத்தாலே அவர்கருத்தறிந்து இப்படி அகதிகளுக்கே கதியாயிருக்கிற தேவரையொழிய, என்னுடைய வபராதங்களைப் பொறுத்துரக்ஷிக்க, ஏதத்கருணாவான்களான பெரியபெருமாள் முதலானார்க்குத்தான் முடியுமோ? இனி பாபயருசியையு முண்டாக்கி, பரமபதத்திலே சேரும்படி பண்ணி யருளவேணு மென்கிறார் அன்றிக்கே அநவரதம் செய்கிற வபராதங்களை *க்ஷமி த்துரக்ஷிக்கும்போது பெரியபெருமாள் முதலானாராகவேண்டாவோ வென்னில்? அது †ஸமக்கன்றி யாவர்க்கு முடியுமென்கிறாராகவுமாம்

தெண்ணரங்கர் தமக்காமோ? தேவியர்க்காமோ?
சேனையர்கோன்முதலான சூரியர்க்காமோ?
மன்னியசீர்மாறனருள்மாரிதமக்காமோ?
மற்றுமுள்ள தேசிகர்கள் தங்களுக்குமாமோ?

†உனக்கின்றி

என்னுடைய பிழைபொறுக்க யாவருக்குமுடியும்?
எதிராசா வுனக்கன்றி யானொருவர்க்கானேன்
உன்னருளாலெனக்கு ருசிதன்னையுமுண்டாக்கி
ஒளிவிசும்பிலடியேனை யொருப்படுத்துவிரைந்தே (௨௬)

எதிராசா=எம்பெருமானாரே! தென்னரங்கர் தமக்காமோ = (அடியேனுடைய அபராதங்களை க்ஷமிக்க) பெரியபெருமாளுக்குத்தான் ஶக்யமோ? தேவியர்கட்காமோ = பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களுக்குத்தான் ஶக்யமோ? சேனையர்கோன்= ஸேநாதிபதியாழ்வான், முதலான=தொடக்கமான, சூரியர்கட்காமோ = நித்யஸூரிகளுக்குத்தான் ஶக்யமோ? மன்னிய=ஸ்திரமாயிருக்கிற, சீர் = ஆஶ்ரித விஷயத்தில் வாத்ஸல்யாதி கல்யாண குணங்களையுடையரான, மாறன் = நம்மாழ்வார், அருள்மாரி=சேதநர் விஷயத்தில் க்ருபையை வர்ஷிக்கிற திருமங்கையாழ்வார், தமக்காமோ=இவர்களுக்குத்தான் ஶக்யமோ? மற்றுமுள்ள = மற்றுமுண்டான தேசிகர்கள்=நாத யாமுநாதிகளான ஆசார்யர்கள், தங்களுக்கு மாமோ=அவர்களுக்குத்தான் ஶக்யமோ? என்னுடைய=அடியேனுடைய, பிழைபொறுக்க = அபராதங்களை ஸஹிக்க, யாவருக்குமுடியும்=எவர்களுக்குத்தான் ஶக்யமாகும்? உனக்கன்றி=தேவரீருக்கன்றி, யான் =அடியேன், ஒருவர்க்கானேன்=மற்றொருவர்க்கு சேஷபூதனானேனோ, உன்னருளால்=தேவருடைய க்ருபையாலே, எனக்கு = அடியேனுக்கு, ருசிதன்னையுமுண்டாக்கி=ப்ராப்ய ருசியையும் விளைத்து, ஒளிவிசும்பில்=நித்ய தேஜோரூபமான பரமபதத்தில், அடியேனை=தாஸனை, விரைந்து =அதிஶீக்ரமாக, ஒருப்படுத்து=சேர்த்தருளவேணும் ஏ=பாதபூரணம்

(வ-ம்) யதிகளுக்கு நாதரானவரே! ஸர்வஜ்ஞஸர்வஜ்ஞரான ஸர்வேஶ்வரனாலும் பரிகணித்து முடியாத அடியேனுடைய வபராதங்களை க்ஷமிக்க "దోషో యద్యపి తస్య స్యాత్ -தோஷோயத்யபிதஸ்யஸ்யாத்" என்றும், (௧) "என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" என்று பேசும்படியான பெரியபெருமாளுக்குத் தான் ஶக்யமோ? அவர்க்கும் பொறைக்குவர்த்தாய (௨) 'న కశ్చిన్నాపరాధ్యతి-நகஶ்சிந்நாபராத்யதி'' என்றும் (௩) "కిమేతన్నిర్దోషః క ఇహ జగతి - கிமேதந்நிர்தோஷ:க இஹஜகதி" என்றும் பேசும்படியான பெரியபிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களுக்குத் தான் ஶக்யமோ? இப்படியான இவர்களிருவருடையவும் 'சேர்த்தியிலடிமையை ஆசைப

(௧) பெரி-தி-௪ ௯ ௨ (௨) ரா-யு ௧௧௬ ௪௪ (௩) ஶ்ரீகுணரத்ந

h 1125

படடவாகளுககுஅநத கைஙகாய போகபாகிகளாமபடி (க) "ஆஜ்ஞா ஹ்யநுஜ்ஞாம் - அஸமாபிஸதாலயோபவது" எனறு கூடடிககொள ளுமா ஸ்ரீஸேனாபதியாழவான துடககமான நிதயஸூரிகளுககுத தானமபகயமோ? இவாகள தான விஷவகஸேநஸமஹிதை விஹ கேநதிரஸமஹிதைகளிலே பரபததியாககா பரதாமகிறே நிதய மாயப பொருநதியிருபபதான ஆமரிதவிஷய வாதஸலயாதிகுண யுகதாாய, அதனை யதஷடாநமோஷமாமபடி (உ)*பயனனறாகிலும பாஙகலலராகிலும செயல நனறாகததிருததிப பணிகொளளுமா நம மாழவார, இவரோபாதி சேதநவிஷயததிலே,கருபையைவாஷிககிற திருமஙகையாழவாா இவாகளுககுத தானமபகயமோ? மறறுமாழ வாாகள கருபைககு விஷயமாய, கருபாமாதா பாஸநாசாாயாகளா யிருககிற நாதயாமுநாதிகளாயிருககிற வவாகள துடஙகமாக இவவ ருககுளள வாசாாயகளுககுததான மபகயமோ? அபராதஸஹரான தேவாககொழியக கூழுகதரான வெதததை யதிமமிததயாவானகளா னுககுத தானிததைசசெயது தலைககடடபபோமோ? அது ஒருவ ருககும அமமகயமாகையாலே(௩)"நிகரினறிநினறவெனனீசசைதககு நினனருளினகணனறிப புகலொனறுமிலலை"எனகிறபடியே தலைக விநதுவாய, ஸாவாபராதஸஹராயிருககிற தேவாககொழிய,அபரா தாாமாலயனுன நான காககதைபபோலே வேறொரு கோஷடிககா ளாகேனை—

உபாயதசையில ரகஷிததவோபாதி, உபேயதசையிலும தேவர் கருபையாலே பராபயருசியையும விளைதது, (௪) "சுடரொளியாய நினறதனனுடைச்சோதி" எனறும, (௫) "தெளிவிசும்பு" எனறும் சொலலபபடுகிற பராபபதேசததிலே அடியேனை (௬) "அஙகுறறே னலலேன" எனனுமபடி ஆநதராளிகனுக விடடுவையாமல சீககிர மாக வொருதலைபபிததருளவேணும ஒருகோடியில சேரககவேணு மெனறபடி. உனககனறி எனகிறவிதனை கீழுமமேலும கூடடி நிரவஹிபபது ஒருவேளையிலே, "க்ஷிபாமி" "நக்ஷமாமி" எனனும நிரஙகுமஸவதநதரனுககும, "த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி-

(க) ரா-யு-க௮-௩௮ (உ) கணணி-௧௦, (௩) இரா-நூ-
(௪) தி-வாய-௩-௧௦-௫ (௫) தி-வாய-௩-௭ ௫ (௬) தி-வாய ௫-௭-௨

க்ஷமாலக்ஷ்மீப்ருங்கீஸ்ஸலகாஞ்சோநமாத்ரமத்து" என்றும், (௧) "திமிர் கொண்டாலொத்து நிற்கும்" என்றும் பேசும்படி உந்மஸ்தஸமான போகத்தாலே மத்தத்துஸ்தப்தைகளாயிருக்குமவர்களுக்கும், அச சோத்தியிலே கைங்கர்யநித்யநிரதராய், அஸ்தாநஹோரக்ஷாவ்யஸ நிகளாய், *ஆங்காரவாரமதுகேட்டு அழலுமிழுமவர்களாயிருக்குமவர் களுக்கும் அசசோத்தியைப் பற்பவிக்கவாசைப்பட்டு (௨) "சிந்தைகலங் கித்திருமாலென்றழைப்பன்" என்றும், (௩) "உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து" என்றும், (௪) "உன்னைக்காணுமாசையென்னும் கடலில்வீழ் ந்து" என்றும், பக்திபாரவஶ்யத்தாலே ஆழங்காற்பட்டிருக்குமவர் களுக்கும், மற்றும் க்ருதக்ருத்யராய்யாகாகை விடும்பொழுதையும், மாக வைகுந்தங்காண்கையையும் மநோரதிக்கிற முமுக்ஷுக்களுக்கும், ஸர் வதாபராந்தத்தைக்கண்டு பரோபதேசம் பண்ணுகைகூடாதிறே! தம் மை அழியமாறியும் ஸம்ஸாரிகள் துர்க்கதிகளைக்கண்டு* அவர்பின்பட ருமதுணையாய் அவர்கள் அவிதேயதையைப் பாராமல், ஸர்வதாபரோப தேஶம்பண்ணியும் அதுக்காலே,* ஆருமாளாரென்கிறவனுடைய தனி மைதீரும்படி மங்களாஶாஸநபரரை யுண்டாக்கி பரஸம்ருத்தியே பேறும்படி நடத்திக்கொண்டு போருமவரொருவராகையாலே இவர்க் கேயாயத்தித்து கூடுவது, (௫) "அதுதிருக்கதலாவதே" என்று கைவிட்டதைப்பிறே கைக்கொண்டிருக்கி *திருமகள்கேள்வனுக்காக்கிய ருளிற்று ஆகையிறே இவரும்பபடியருளிச்செய்தது, (௬) "மருள் கொண்டிகளுக்கும் நமக்குநெஞ்சே யிராமாநுசன்செய்யும் சேமங்கள் மற்றுள்ளாரதரமோ" என்றிறே அழகாரு மருளிச்செய்தது "పరంవర్ధరీయాంసఙ- பரமந்த்ரகரீயாஸம்" இத்யாதி (௨௬)

(அ-கை) இவர் "ஒளிவிசும்பிலடியேனை ஒருப்படுத்துவினைந தே" என்றவனந்தரம் அவரும், (௭) "வானேத்தருவானெனக்காய்" என்றும்படி மோக்ஷப்ரதாநத்திலே ஸத்வராயிருக்கிறபடியை ஸா க்ஷாத்கரித்து, இனி த்யாஜ்யமான விவவிபூதியிலுண்டான தடங்களு மநுபாதேயமாய், ப்ராப்யமான வவவிபூதியிலுண்டான தடங்களும் உபாதேயமாயற்றபின்பு, அவற்றின் விஸ்மரணஸ்மரணங்களான க்ருத்யாக்ருத்யங்களைத் தமக்கு விதேயமான திருவுள்ளத்தைக் குறித்து விதிக்கருளுகிறார்

---

(௧) தி-வாய்-௬ ௫-௨ (௨) தி-வாய்-௩-௪-௧௦ (௩) தி-வாய் ௫-௭-௫
(௪) தி-மொ-௪-௬ ௩ (௫) பெரியதி-௨-௫ (௬) இரா-நூ- (௭) தி-வாய்-௧௦-௮-௫

இவ்வுலகில் இனியொன்று மெண்ணாதே நெஞ்சே?
இரவுபகலெதிராச ரெமக்கினிமேலருளும்
அவ்வுலகை யலர்மகள்கோ னங்கிருக்கு மிருப்பை
யடியார்கள் குழாங்கடமை யவர்களநுபவத்தை
இவ்வுயிரு மதுக்கிடப்பெற்றிழந்து கிடந்த
தெனுமதனையென்று மதுக்கிடைச்சுவராய்க் கிடக்கும்
வெவ்வினையால் வந்தவுடல் விடும்பொழுதை விட்டால்
விளையுமின்பந்தன்னை முற்றும்விடாமலிருந்தெண்ணே

நெஞ்சே = மனமே, இவ்வுலகில் = இந்த லோகத்தில், இனி ஒன்றும் = இனியொன்றையும், எண்ணாதே = சிந்தியாதே, இரவு பகல் = இராப்பகலும், எதிராசர் = எம்பெருமானார், எமக்கு = நமக்கு, இனிமேல் அருளும் = இனிமேல் பாலிக்கும், அவ்வுலகை = வானுலகான அந்தலோகத்தையும், அலர்மகள் கோன் = புஷ்பவாஸிநியான பெரியபிராட்டியார்க்கு வல்லபனான ஸர்வேச்வரன், அங்கு = அந்தப் பரமபதத்தில், இருக்கும் இருப்பை = திவ்யவிமஹாஸநத்திலே எழுந்தருளியிருக்கும் இருப்பையும், அடியார்கள் = நித்யஸூரிகளுடைய, குழாங்கள் தமை = ஸமூஹங்களையும், அவர்கள் அநுபவத்தை = அவர்களுடைய ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டநுபவிக்கும் அநுபவத்தையும், இவ்வுயிரும் = இந்த ஆத்மவஸ்துவும், அதுக்கு = அந்தபோகத்துக்கு, இடப்பெற்று = ப்ராப்தனாயின்று, இழந்து கிடந்து = அத்தைப் போக்கடித்துக்கொண்டு கிடந்தது, என்னுமதனை = என்று சொல்லுமதையும், என்றும் = எக்காலமும், அதுக்கிடைச்சுவராய்க் கிடக்கும் = அந்த அநுபவத்துக்கு ப்ரதிபந்தகமாய்க் கிடக்கும், வெவ்வினையால் = க்ரூரகர்மங்களால், வந்த = உண்டான, உடல் விடும்பொழுதை = தேஹவிமோசநமாகும் காலத்தையும், விட்டால் = அந்தத்தேஹத்தை விட்டபிறகு, விளையும் = பலிக்கும், இன்பந்தன்னை = நிரதிசயாநந்தத்தையும், முற்றும் = இந்த ஸமஸ்த விஷயங்களையும், விடாமலிருந்து = இடைவிடாமலிருந்து, எண்ணு = சிந்தித்துப்போரு (௪௭)

(வ-ம்) பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான மநஸ்ஸே! "[illegible]-அந்த தேஹாவஸாநே த்யக்த ஸர்வேதரஸ்ப்ருஹ:" என்கிறபடியே இந்தக் கொடுவுலகில் ஹேயமாயிருப்பதான ப்ரக்ருதிப்ராக்ருதங்களெல்லாம் த்யாஜ்யமென்று நேரேயறிந்த பின்பு அல்பாஸ்திரத்வாதி தோஷதுஷ்டமானவற்றிலே ஸந்தேஹமும் அங்கீகாரயோக்யமாக விசாரியாதே, எம்பெருமானார் நமக்கு ப்ராப்யந்திலையுமுண்டாக்கியருளி,

இனிமேல் வருங்கொடையாக வருந்தம் வானுலகான வந்த லோகத்தையும், அந்தலோகமெல்லாம் திறம்பெறும்படி (௧) "எழில்மலர் மாதருந் தானு மிவ்வேழுலகை இன்பம்பயக்க வினிதுடனவீற்றிருந்து" என்கிறபடியே புஷ்பத்தில் பரிமளம் வடிவுகொண்டாப்போலேயிருக்கிற பெரியபிராட்டியாருக்கு வல்லபனை வ்யாவ்ருத்தித்தோற்றவங்கே திவ்யஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளியிருக்குமிருப்பையும்,

அச்சோதத்தியிலே அடிமைசெய்கிற (௨) "அடியார்கள் குழாங்களை" என்கிற ப்ராப்யமானவர்கள் ஸமூஹந்தன்னையும், அவர்கள் ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டநுபவிக்கு மநுபவத்தையும், இவ்வர்த்தமாவும் அதுக்கு ப்ராப்தனாயவைத்து அத்தை இழந்துகிடந்ததென்கிறவற்றையும், அங்கயாபி அந்தஅநுபவத்துக்கு ப்ரதிபந்தகமாய்க் கிடக்கும் (௩) 'பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்' என்கிறபடியே கர்மத்தாலே யுண்டான தேஹவிமோசந மாங்காலத்தையும், தேஹவிமோசநாநந்தரம் பலிக்கும் நிரதிசயாநந்தத்தையும் இப்படி யுக்தங்களாய ஸ்வரூபாநுரூபமாயுள்ளவை யெல்லாவற்றையும் திவாராத்ரவிபாக (ஊரம) மறயிடைவிடாமல் ஒருப்பட்டிருந்து சிந்தித்துப்போரு அன்றிக்கே உக்தங்களான வற்றிலொன்றும் விடாமலொருப்பட்டிருந்து சிந்தித்தென்னவுமாம் "இவ்வுலகினி யொன்றுமெண்ணாதே" என்கிற இதுக்கு (௪) "மருளொழிநீ" என்று சொல்லுகிற அர்த்திமதஸா விரோதியான அர்ச்சாவதார பாரவண்யமாகவுமாம் (௨௭)

(அ-கை) செய்ததெல்லாஞ் செய்தும் இது நெடுங்காலமில்லாத ப்ராப்யருசி இப்போது எம்பெருமானுடைய க்ருபையாலே உண்டாயிற்றென்று அந்தலாபத்தைப்பேசி அநுபவிக்கிறார்

பண்டுபல்லாரியரும் பாருலகோருய்யப்
பரிவுடனே செய்தருளும் பல்கலைகடம்மைக்
கண்டதெல்லாமெழுதி யவைகற்றிருந்தும் பிறர்க்குக்
காதலுடன் கற்பித்தும் காலத்தைக்கழித்தேன்

(௧) தி-வாய்-௭-௧௦-௧. (௨) தி-வாய்-௨-௩-௧௦
(௩) திருவி-௧ (௪) தி-வாய்-௧௦-௯-௧.

புணடரீகைகேளவனுறை பொனனுலகுதனனில
    போகநினைவொனறுமினறிப பொருநதியிஙகேயிருநதேன
எணடிசையுமேதது மெதிராசனருளாலே
    எழிலவிசுமபேயனறி யிபபோதெனமனமெணணாதே

பணடு=பூாவகாலததில, பலவாரியரும = ஆததமோஜஜீவநததபராரா யிருககிற பூாவாசாாயாகளனைவரும, (ஏககணடமாய) பாருலகோருயய = இநதப பூலோகததிலுணடான ஸமஸத சேதநாகளுமுஜஜீவிகக, பரிவுடனே = இவாகளிடததிலுணடான பரேமையினாலே, செயதருளும = அருளிசசெயத, பலகலைகள தமமை=பலபரபநதஙகளை, கணடதெலலாம= பாாததெலலாம, எழுதி=லிகிததது, அவை=அவறறை, கறறிருநதும= ஆசாாயமுகததாலே யபயஸிததிருநதும, பிறாககு = அநயருககு, காதலுடன = பரேமையோடு, கறபிததும = போதிததும, காலததைக கழிததேன=காலததைப போககினேன, புணடரீகை கேளவன=நளிநவாஸிநியான பெரியபிராடடியாாககு வலலபனானவன, உறை = நிதயவாஸம பணணுகிற, பொனனுலகுதனனில = நிதயவிபூதியான பரமபததுககு, போகநினைவொனறுமினறி = போகவேணுமெனகிற ஸமரணலேசமுமிலலாமல, பொருநதியிஙகே யிருநதேன = இவவிபூதியில ஆசையுளளவனாய வஸிததேன, எணடிசையும = அஷடதிககிலுணடானவாகளும, ஏததும = தன வைபவததைசசொலலி ஸதோதரம பணணுமபடியான, எதிராசன = எமபெருமானாருடைய, அருளாலே = கருபையாலே, எழிலவிசும பையனறி=விலகஷணமான பரமாகாசததைகயே யொழிய, வேறொனறை இபபோதெனமனமெணணாதே= இபபோதென மநஸஸானது ஸமரியாது

(வ-ம) நலலடிககாலமான பூாவகாலததிலே, ஆததமோஜஜீவநததபராராயிருககிற பூாவாசாாயாகளனைவருமேசககணடமாய, இநத பூலோகததிலுணடான ஸமஸதசேதநாருமுஜஜீவிகக, இவாகளிடததில ஸஸநேஹமாகச செயதருளும பலபரபநதஙகளதனனை(க)“தெரிததெழுதி” இதயாதிபபடியே, ஆதராதிசயததாலே தேடிககணடவைகளெலலாவறறையும லிகிதது அததை ஆசாாயமுகததாலே அபயஸிதது, தநநிஷடனாயிருநதும, இநநிஷடையிலலாதவாநயருமதநநிஷடரா யுஜஜீவிககுமபடி, அவாகளுககு ஆதரததோடே அபயஸிபபிததும, காலகேஷபமபணணினேன, (உ)“தாமரையாள கேளவன” எனனுமபடி பெரியபிராடடியாாககு வலலபனானவன, நிதய

(க) ச திருவ கக (உ) க-திருவ சஎ

வாஸம்பண்ணுகிற ஸ்ப்ருஹணீயமான ஸ்ரீவைகுண்டத்தில் போக வேணுமென்கிற ஸ்மரணலேசமுமின்றிக்கே இவ்விபூதியிலே ஸக்தனாய் வர்த்தித்தேன்

(ச) *திசையனைத்துமேறுங்குணனையாலே அஷ்டதிக்கிலுண்டானவர்களும் தன்வைபவத்தைச் சொல்லி ஸ்தோத்ரம்பண்ணும்படியான எம்பெருமானாருடைய க்ருபையாலே விலக்ஷணமான பரமாகாசத்தையேயொழிய, இப்போதென்னுடைய மநஸ்ஸானது ஸ்மரியாது இதொரு க்ருபாவிசேஷமிருந்தபடி என்? என்று கருத்து, இவ்விடத்திலேகாரந்தேற்றத்தில். (உஅ)

(அ-கை) இனித்தம்முடைய ப்ராப்யவிரோதி நிரஸநசீலரான எம்பெருமானார், ஸ்ரீபாஷ்யாதிகளான ஸ்ரீஸூக்திகளாலே பாஹ்ய குத்ருஷ்டி நிரஸநம்பண்ணியருளின விஜயபரம்பரைகளைச்சொல்லி அத்தாலுண்டான வீரஸ்ரீக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார்

தாழிசை

சாறுவாகமதநீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே
    சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரிமுறித்திட
மாறுசெய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்தறமிகுத்துமேல்
    வந்தபாசுபதர் சிந்தியோடும்வகை வாதுசெய்த வெதிராசனார்
கூறுமாகுருமதத்தொடோங்கிய குமாரிலன்மதமவற்றின்மேல்
    கொடியதர்க்கசரம்விட்டபின் குறுகிமாயவாதியரைவென்றிட
மீறிவாதில்வரு பார்க்கரன்மத விலக்கடிக்கொடியெறிந்துபோய்
    மிக்கயாதவமதத்தை மாய்த்த பெருவீரர் நாளுமிக வாழியே.

சாருவாக மதநீறுசெய்து = "ப்ரத்யக்ஷமேகம் சார்வாக:" என்கிற சார்வாகமதத்தை ஸ்வஸூக்திகளாகிற அக்நிஜ்வாலையாலே பஸ்மமாம்படி பண்ணி, சமணச்செடிக்கனல் கொளுத்தியே = சமணராகிற செடிக்குஅப்படியே அக்நிப்ரக்ஷேபத்தைப்பண்ணி, சாக்கியக்கடலை வற்றுவித்து = சாக்கியராகிற ஸமுத்ரத்தை ஸ்வஸூக்திகிரணங்களாலே சோஷிப்பித்து, மிகுசாங்கியக்கிரிமுறித்திட = அதிகமாயிருப்பதான ஸாங்க்யமலையை வாக்வஜ்ரத்தாலே சேதித்து, மாறுசெய்திடு கணாதவாதியர்கள் = ப்ரதிகோடி

---

(ச) இரா-நூ-

களாய வாதம்பண்ணுகிற காணாத வாதிகளுடைய, வாய்=வாக்கை, தகர்த்து=தம் வாக்காலே பக்நமாம்படி பண்ணி, அறமிகுத்து மேல்வந்த = அதிகரித்து மேன்மேலும் வந்த, பாசுபதர்சிந்தியோடும்வகை=பாணாஸுர யுத்தத்திலே ருத்ரன் தன் பரிவாரத்தோடு ஓடினப்போலே, தன் பக்தர்களான சிவசமயத்தோர்களும் சீறுபாறுக்கச் சிதறி யோடும்படி, வாதுசெய்த வெதிராசனார் = வாதம்பண்ணி யருளின யதிராசர், கூறும்=பிறருரைக்கிற பதாய், மா = பெருத்திருப்பதான, குரும்மத்தோடு = பராக்ரமத்தோடு, ஓங்கிய = உயர்ந்திருப்பதான, குமாரிலன் மதமல்வெற்பின்மேல் = பாட்டமதமென்கிற வெற்பின்மேலே, கொடியதாக்கசரம்விட்டபின் = க்ரூரமா யிருப்பதான தர்க்க ஶாஸ்த்ரத்தை (பாணத்தை) ப்ரயோகித்த பின்பு, குழிமாய வாதியரை வென்றிட=மாயாவாதிகளிருந்த விடத்திலே சென்று கிட்டியவர்களை ஜயித்திட்டு, மீறிவாதில்வரும்=மிகுத்துக் காவித்து வாதத்திலே வருகிற, பாஸ்கரன் மதவிலக்கடிக்கொடியெறிந்துபோய்=பாஸ்கரன் மதமென்கிற வேர்கொடிகளை குருக்கிட்டு அவற்றைச் சேதித்தெறிந்துவிட்டு அப்பாலசென்று, மிக்க யாதவமத்தை மாய்த்த = அதிகமான யாதவப்ரகாசன் மதத்தை மாண்டுபோம்படி பண்ணின, பெருவீரர்=மிக பராக்ரமத்தையுடைய எம்பெருமானார், நாளுமிகவாழியே=நித்யாபிவ்ருத்தமாம்படி மங்களத்தை யுடையராகவேணும் (௨௧)

(வ-ம) "ப்ரத்யக்ஷமேகம் சார்வாக:-ப்ரத்யக்ஷமேகம் சார்வாக:" என்கிற சார்வாகமத்தை ஸ்வஸூக்திகளாகிற அக்நிஜ்வாலையாலே பஸ்மஸாத்தாம்படிபண்ணி, சமணராகிற செடிக்கு அப்படியே அக்நிப்ரக்ஷேபத்தைப்பண்ணி, ஶாக்யராகிற ஸமுத்ரத்தை ஸ்வஸூக்தி கிரணங்களாலே ஶோஷிப்பித்து, அதிகமாயிருப்பதான ஸாங்க்யக்ரியை வாக்வஜ்ரத்தாலே [illegible] த்திட்டு, பரதிகோடிகளாய வாதம்பண்ணுகிற காணாதவாதிகளுடையவாக்கை ஸ்வவாக்காலே ([illegible]) பக்நமாம்படிபண்ணி,

மிகவுமுத்தராய மேல்வந்தபாசுபதர், பாணாஸுரயுத்தத்திலே ருத்ரன் ஸபரிகரனாயோடினப்போலே, தத்பரர்களான சிவர்களும், சீறுபாறுகச் சிதறியோடும் ப்ரகாரம் வாதம்பண்ணியருளினவராய், ஏதேனுமொன்றை ஜல்பியாநிற்பதாய், பெருத்திருப்பதான பராக்ரமத்தோடே யுச்சராயமா யிருப்பதான பாட்டமதமென்கிற வெற்பின்மேலே, க்ரூரமாயிருப்பதான தர்க்கஶாஸ்த்ரத்தை ப்ரயோகித்தபின்பு, எங்கும் பரந்திருக்கையாலே, மாயி

களிருந்த விடத்திலேசென்றுகிட்டி, (க) "வாதில்வென்றான் எம்மி ராமாநுசன்" என்கிறபடியே அவர்களை ஜயித்திட்டு, மிகைத்து வாதத்திலே வருகிற பாஸ்கரனுடைய மதமாகிற வமார்க்கத்தை, ஒருவரும் கடவாதபடி நிரோதித்து, கழியமிக்கிருக்கிற யாதவ மதத்தை மாண்டுபோம்படி பண்ணின வெம்பெருமானாருடைய இத ர தர்ஸ நிரஸநத்தாலேவந்த மஹாவீரம், நாட்டோறும்பி(ற)வந்த தமாய வாழவேணும் குருமதம் = ப்ராபாகரமதம் , குமாரிலன் மதம்=பாட்டமதம் "கோடியெறிந்துபோய்"என்று - அவ்வளவிலே நில்லாதே கைகழிந்திருக்கிற பரிப்பேயாகவுமாம். வந்தவாதிய ரென்றும் பாடம்சொல்லுவர் (௨௯)

(அ-கை) இனி இதர நிரஸநம்பண்ணியருளின ப்ரமந்த்ர, ஸ்ரீ பாஷ்யம் திருவாய்மொழி முதலான பகவத்விஷயங்களை வ்யாக்யாநித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிறவிருப்பு தமக்கு ஸாக்ஷாத்காரமாயிருக்கையாலே, பதாதிகேஸாந்தமாக வநுபவித்து இவையெல்லாம் தனித்தனியே நித்யமாய்ச் செல்லவேணுமென்று மங்களாஸாஸநம்பண்ணியருளுகிறார்

எண்சீர்க்கழி நெடியாசிரிய விருத்தம்

சீராருமெதிராசர் திருவடிகள்வாழி
திருவரையிற்சாத்திய செந்துவராடைவாழி
ஏராருஞ்செய்யவடி வெப்பொழுதும்வாழி
இலங்கியமுந்நூல்வாழி யிணைத்தோள்கள்வாழி
சோராததுய்ய செய்யமுகச்சோதிவாழி
தூமுறுவல்வாழி துணைமலர்க்கண்கள்வாழி
ஈராறுதிருநாமமணிந்த வெழில்வாழி
இனிதிருப்போடெழில் ஞானமுத்திரைவாழியே (௩௦)

சீர் = கல்யாண குணங்களாலே, ஆரும் = பரிபூர்ணமான, எதிராசர் = எம்பெருமானாருடைய, திருவடிகள் = பரமபோக்யமாய் நமக்கு ஸ்ரீ பூஷணமாயிருக்கிற திருவடித்தாமரைகள், வாழி = நித்யமங்களமாயிருக்க வேணும், திருவரையில் = கடிப்ரதேசத்தில், சாத்திய = தரித்த, செந்து வராடைவாழி = ஆதித்யனைப் பரிவேஷித்தாப்போலே மிக்கசிவப்பையுடைத்தான காஷாயவஸ்த்ரம் நித்யமங்களமா யிருக்கவேணும், ஏராரும் = அ

(க) இரா-நு-௩௮

ழகால் நிறைந்த, செய்யவடிவு = சிவந்திருப்பதான திவ்யமங்கள விக்ரஹம், எப்பொழுதும் = ஸர்வகாலத்திலும், வாழி = நித்யமங்களமாயிருக்கவேணும் இலங்கிய முந்நூல்வாழி = வைதிகோத்தம ரென்னுமத்தை நிறம் பெறுத்துமதாய், ஸந்த்யாராக ரஞ்ஜிதமான மேகத்திலே மின்கொடி படர்ந்தாப்போலே திருமார்பிலே ப்ரகாசிக்கிற ப்ரஹ்மஸூத்ரம் நித்யமங்களமாய்ச் செல்லவேணும், இணைத்தோள்கள் வாழி = பொற்கற்பகத்தின் சாகைகளாய், அதற்குமேல் மோக்ஷப்ரதாந தீக்ஷிதங்களாய், ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி நோவுபடுகிறவர்களை உத்தரிக்கிற சக்தியை யுடைத்தாய், இப்படிக் கொடுக்கவு மெடுக்கவு மாம்படியான குணத்தாலே பணைத்து செழித்திருப்பனவாய், அதுக்குமேலே வகுளதுளஸீ நளிநாக்ஷ மாலாலங்க்ருதமாயிருக்கிற பாஹுயுகளங்களானவை நித்ய மங்களமாயிருக்கவேணும் சோராத-துய்ய செய்ய-முகச்சோதிவாழி = அநுபாவ்யமாய், பகவத் ஸாக்ஷாத்காரத்தாலும் ஆச்ரிதாச்ரயத்தில் ஹர்ஷத்தாலும் அநாச்ரித நிரஸநத்தில் அநாயாஸத்தாலும் அஸங்குசிதமாய், நிர்மலமாய், சோபாவஹமாயிருக்கிற, முகஜ்யோதிஸ்ஸானது நித்யமங்களமாய்ச் செல்லவேணும், தூமுறுவல்வாழி = ஆச்ரித ரக்ஷணத்தாலுண்டான வாநந்தத்தாலும் பகவதநுபவப்ரகர்ஷத்தாலுண்டானவாநந்தத்தாலும் பூவலர்ந்தாப்போலே ப்ரீதியைப்ரகாசிப்பிக்கிற பரிசுத்தமான சிறுநகையும் நித்யமங்களமாய்ச் செல்லவேணும், துணைமலர்க்கண்கள்வாழி = ஸ்ரீரங்கஸ்ரீயையும், தாம் திருத்தத் திருத்தின ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையும் எப்போதும் கண்டுகளிக்குமதாய், காருண்யாம்ருத ப்ரஸ்ரவணசீலமாய் ஆச்ரிதரை யங்கங்களாக விழிக்குமென்னும்படி கடாக்ஷிக்கிற த்வந்த்வாரவிந்த ஸுந்தரமான திருக்கண்கள் அழகுமாறுமல் நித்யமங்களமாயிருக்கவேணும், ஈராறு திருநாமமணிந்த எழில் வாழி = கீழ்ச்சொன்ன வெல்லாத்தையும் நிறம்பெறுத்துவனவாய் ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீக்கு வர்த்தகமாயிருப்பதாய், பொன்மலையின் பரிஸரமெங்கும் வெண்டாமரை பரப்புமாறப்பூத்தாப்போலே சிவந்த திருமேனியில் வெளியதான த்வாதசோர்த்வபுண்ட்ரத்தாலுண்டான ஸௌந்தர்யம் நித்யமங்களமாய்ச் செல்லவேணும், இனிதிருப்போடு = பத்மாஸநஸ்தராயெழுந்தருளியிருக்கிற இருப்போடு, எழில் = உபயவேதார்த்த ப்ரகாசகமாயிருக்கிற, ஞானமுத்திரை = பரதத்வபோத முத்திரையானது, வாழியே = நித்யமங்களமாயிருக்கவேணும் (௬௦)

(வ-ம) ஆச்ரிதருக்கநுபாவ்யமான ஸ்வரூபரூபகுணங்களோடுவாசியற எல்லாத்தாலும் பரிபூர்ணராய், யதிகளுக்கு நாதரான எம்பெருமானாருடைய (க) “அமரர் சென்னிப்பூ” என்னுமா

(க) திருக்குறு-௬

போலே (க)"இராமாநுச னடிப்பூ" என்று சொல்லப்படுமதாய், அத் ஏவ பரமபோக்யமாய், நமாங்குச சிரோபூஷணமாயிருக்கிற திருவடிப் போதுகள் போதுசெய்யாமல், ஏவமிதாகாரத்தோடே நித்யமாய்ச் செல்லவேணும்; அதுக்குமேலே ஆறுபராகாரத்துக்காலேப் ப்ரஹாந்தாத்ம ஸ்வரூபத்துக்குத் தத்ஸாம்யமுண்டாகையாலே, (உ) "[illegible] -ஸீதாகாஷாயவாஸிநீ" என்னும்படி பாரதந்த்ர்ய ஸ்யாநுத்வ ஸூசகமாய் திருவரையூத்தாப்போலே திருவரைக்கலங்காராவஹமாய், ஆதித்யனைப் பரிவேஷித்தாப்போலே திருவரையிலே சூழ்ச்சாற்றி மிக்கசிவப்பையுடைத்தான திருப்பரிவட்டமும் நித்யமாய்ச் செல்லவேணும், அதுக்குமேலே ஆஸ்ரிதருக்கு ஸுபாஶ்ரயமாய், ஸௌந்தர்யாதிகளாலேமிக்கு புஷ்பஹாஸஸுகுமாரமாய், (ங) "[illegible] - ரூபமேவாஸ்யை தந்மஹிமாநமாசஷ்டே" என்கிறபடியே, பரமாத்மாகம்புறம்பொசிந்தாப்போலே ஸிவந்திருப்பதான திவ்யமங்களவிக்ரஹமும், ஸர்வகாலத்திலும், "[illegible]- நித்யம் நித்யா க்ருதிதரம்" என்னும்படி நித்யமங்களமாய்ச் செல்லவேணும்; அதுக்குமேலே வைதிகோத்தமரென்னுமதை நிறம் பெறுத்துமதாய், ஸந்த்யாராக ரஞ்ஜிதமானமேகத்திலே மின்கொடிபடர்ந்தாப்போலே திருமார்பிலே ப்ரகாசிக்குமதாய் ப்ரஹ்மஸூத்ரவ்யாக்யாத்ருத்வத்யோதகமாயிருப்பதான ப்ரஹ்மஸூத்ரமப்புநூலோடே நித்யமாயிருக்கவேணும்,

அதுக்கு அநந்தரம் †மிரண்டிடத்திலு மாவாய், (ச) "[illegible] - பாஹுச்சாயமவஷ்டப்தோ யஸ்யலோகோ மஹாத்மந:" என்கிறபடியே ஸர்வாத்தும விஶ்ராந்தி ஹாஸியான பொற்குன்றத்தினுடைய ஶாகைகளாய், அத ஏவ மோக்ஷபரதாந்தீக்ஷிதங்களாய், விசேஷித்து நிமக்நோத்தாரணசக்தியையுடைத்தாய், இப்படி தொடுக்கவும் மெடுக்கவுமாம்படியான குணத்தாலே புணைத்துநெடிதாயிருப்பனவைகளாய், (ரு) 'தோளாரச் சுடர்த்திகிரி சங்குடைச் சுந்தரன்' என்னும்படி, தோள்மேலாழிச்சக்ராம்புஜங்களையுடைத்தாய், ஆகர்ஷகமான ஆழ்வார்களாலே அணைந்தமாயிருப்பனவைகளாய், அதுக்குமேலே வருள துழாவீ நவிநாஷமாலா

---

(க) இரா-நூ-௧0அ
(உ)
(ங)
(ச) ரா-ஸு-ரு-ம-ரு.க
(ரு) ஜ்ஞாநஸார.௨
† இரண்டிடத்திலுமுள்ளவை

லங்க்ருதமாயிருக்கிற யுகளபாஹுக்களானவை, உக்தமான குணங்களோடே நித்யமாய்ச்செல்லவேணும், அதுக்குமேலே (க) “ప్రబుద్ధ ఇవ సౌమ్యాత్మా ముఖం భాతి-பாஹுமவித இவ ஸௌம்பதே முகமபாதி” என்றும், (உ) “முக்கசோதிமலர்ந்ததுவோ” என்றுஞ் சொல்லுகிறபடியே, அநுபாவ்யமாய், பகவத்ஸாக்ஷாத்காரத்தாலும் ஆஸ்ரிதர்பக்கலில் ஹர்ஷத்தாலும் அநாஸ்ரிதநிரஸநத்தில் லந்யாஸத்தாலும் மஸங்குசிதமாய், நிர்மலமாய், ஸோபாவஹமாயிருக்கிற முகஜ்யோதிஸ்ஸும் நித்யமாய்ச்செல்லவேணும்

அதுக்குமேலே (௩) ‘సవిలాసస్మితాధారం బిభ్రాణం ముఖపఙ్కజం-ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்” என்னும்படி ஒரு முகமாய்ச்சேர்ந்து, அந்த முகபத்மத்தினுடைய விகாஸமென்னும்படியாய், (௪) “மின்பன்னிலா முத்தந்தவழ்கதிர்முறுவல்செய்து” என்கிறபடியே, ஆஸ்ரிதரக்ஷணத்தாலுண்டான வாநந்தத்தாலும், பகவதநுபவப்ரகாஷ்டதா லுண்டான வாநந்தத்தாலும், பூவலர்ந்தாப்போலே பரீதியை ப்ரகாசிப்பிக்கிற சாருஹாஸத்தாலுண்டான சந்த்ரிகையை ப்ரவஹிக்கிற ஸுஸ்மிதமு மப்படியே யென்றுமுளதாயிருக்கவேணும் அதுக்குமேலே ஸ்ரீரங்கஸ்ரீயையும், தாமிருந்ததிருந்தின ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையு மெப்போதும் கண்டுகளிக்குமதாய், கருணைக்கு ப்ரஸாணசீலமாய், ஆஸ்ரிதரை யமலங்களாக விழிக்குமென்னும்படிக் கடாக்ஷிக்கிற, தவந்தவாரவிந்தஸுந்தரமான திருக்கண்கள், செவ்விமாறாமல் நித்யமாய்ச் செல்லவேணும்,

கீழுக்தங்களான விவற்றை யெல்லாவற்றையும் நிறம்பெறுத்துமவையாய், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீக்கு வர்த்தகமாயிருப்பதாய், பொன்மலையின் பரிஸரமெங்கும் வெண்டாமரை பரப்புமாறப்பூத்தாப்போலே, சிவந்த திருமேனியிலே வெள்ளியதாய் ஊர்த்வதாஸ்ரயண ஸூசிதஸ்ரக்தியை யுடைத்தான த்வாதசோர்த்வபுண்ட்ரதாரணத்தாலுண்டான ஸௌந்தர்யம் நித்யமாய்ச்செல்லவேணும் கீழுக்தமான வெல்லாத்துக்கும் ப்ரதிஷ்டிகையாயிருந்த வந்தவஸ்திஷ்டாஸக்தியாலே குத்ருஷ்டிகளாகிற குறும்பறும்படியாயு மாஸ்ரிதரக்ஷணத்துக்குறுப்பாயும், கேவல பகவதிச்சையாலே, (௫) “வைய

(க) (உ) திருவாய்-௩-க-க (௩) வி-பு-௫-கஎ-௨0.
(௪) திருவாய் ௯ ௨-௫ (௫) திருவாய்-௪-௩-கக

மன்னிவீற்றிருந்து" என்னும்படி வ்யாவ்ருத்தி தோற்ற, ஹம்ஸ ஸமூஹமத்யே ராஜஹம்ஸமானது ஸரஸமாக விருக்குமாபோலே, பரமஹம்ஸரானதாமும், "సంసేవితః ஸமஸேவிதை:" இத்யாதிப்படியே ராமானுஜார்யவஶ்யகராய இராமானுசனைத்தொழும் பெரியோராயிருக்கிற முதலிகளெல்லாரும் ஸேவித்திருக்க இவர்கள் நடுவே (க) "పద్మాసనోపవిష్టం-పరమేత్య శోధముద్రష్ట-பத்மாஸநோபவிஷ்டம் பாத்தவபோதமுத்ரம்" என்னும்படி, பத்மாஸநஸ்தரா யெழுந்தருளியிருக்கிற விருப்பேபோடே, உபயவேதாந்தார்த்தப்ரகாசகமாய உந்நிதரபத்மஸ்வபகமாயிருக்கிற ஜ்ஞாநமுத்திரையானது, காதாசித்கமன்றிக்கே ஸதாதந்யோகயமாம்படி வாழ்க்கடவதாகவேணும் (உ) "அன்னமாயிருந்தங்கறநூலுரைத்த" என்னக்கடவதிறே †"தேரார்ந்துயய செய்ய முகச்சோதி" என்றும் பாடம் சொல்லுவர், "ஸ்ரீமத்ததங்கரியுகளம்" என்னுமாப்போலே, சீருமென்கிற்றதை திருவடிகளுக்கு விசேஷணமாக்கவுமாம் எதிராசருடைய திருவடிகளாகையாலே *వాయి-வெவ்யஞ்ஜநாநிவத-பாத்திவ்யஞ்ஜநவிதமாயிறே யிருப்பது (௫௦)

(அ-கை) அஸக்ருதாவ்ருத்தி அபேக்ஷாகாரயமாகையாலே மீளவு மாதராதிசயத்தாலே, பாஹ்யகுத்ருஷ்டிநிரஸநம்பண்ணி யருளினமைக்கும், மற்றும் லோகோபகாரகங்களாகச் செய்தருளினவையெல்லாத்துக்கும், மங்களாசாஸனம்பண்ணியருளுகிறார் கீழ்ப்பாட்டுவிக்ரஹபரம் இப்பாட்டு ஸ்வரூபபரம்

அறுசமயச்செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச்சிறிதுமறத் திறத்து விட்டான் வாழியே
தென்னரங்கர்செல்வமுற்றுந் திருத்திவைத்தான்வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரைசெய்த தமிழ் மறைவளர்த்தோன் வாழியே
அறமிகுநற்பெரும்பூதூ ரவதரித்தான் வாழியே
அழகாருமெதிராச ரடியிணைகள் வாழியே (௫க)

அறுசமயச்செடியதனை = பாஹ்யங்களான ஷண்மதங்களாகிற வருக்ஷங்களை, அடியறுத்தான் வாழியே = மூலச்சேதநம் பண்ணினவர் நித்ய

(க) பராங்குசாஷ்டகம் (உ) தி பெரு-கக ௬-ஐ † தோரரத.

மாக வாழ்ந்தருளவேணும், அடர்ந்துவரும் = கூட்டமாய்க்கூடி மேலிட்டு வருகிற, குதிட்டிகளை = "நான்மறையும் நிறக்ககுறும்புசெய் நீசருமாண்டனர்" என்கிறபடியே வேதத்தில் குறும்புசெய்கிறவர்களை, அறத் துரந்தான வாழியே = ஸவாஸநமாகத் துரத்தியருளினவர் நித்யமாக வாழ்ந்தருளவேணும், சேறு கலியை = "அறுசமயம்போனது பொன்றியிறந்தது வெங்கலி" என்கிறபடியே, இவைத்துக்கெல்லாம் ஹேதுவாய் லோகமெங்கும் காடாய் மூடிவருகிற கொடிய கலியை, சிறிதும் = லேசமும், அறா = இல்லாதபடி, தீர்த்துவிட்டான வாழியே = போக்கடித்தவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும், தென்னரங்கர் = ஸௌந்தர்ய பூர்ணரான பெரியபெருமாளுடைய, செல்வமுற்றும் = ஸ்ரீதிருச்செல்வமெல்லாவற்றையும், திருத்திவைத்தானவாழியே = கட்டளைப்படும்படி பண்ணியருளினவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும், மறையதனில் = வேதத்தில் ப்ரதிபாதிக்கப்படுகிற, பொருளனைத்தும் = ஸகலார்த்தங்களையெல்லாம், வாய்மொழிந்தானவாழியே = ஸ்ரீபாஷ்யரூபேண அருளிச்செய்தவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும், மாறன் = நம்மாழ்வார், உரைசெய்த = அருளிச்செய்த, தமிழ்மறை = த்ரவிடவேதத்தை, வளர்த்தோன் வாழியே = வர்த்திப்பித்தருளினவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும் அறமிக = அதிலதார்த்தபாயமான ஸாரஞ்ஞகிராமம் ஜகத்திலே விருத்தியுடைய, நற்பெரும்பூதூர் = விலக்ஷணமான ஸ்ரீபெரும்பூதூரிலே, அவதரித்தான வாழியே = திருவவதரித்தவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும், அழகாரும் = ஸௌந்தர்யாதிகளாலே பூர்ணராயிருக்கிற, எதிராசர் = எம்பெருமானாருடைய, அடியிணைகள் வாழியே = ஸர்வ ஸாரண்யமான சரணயுகளங்கள் நித்யமங்களமாய்ச் செல்லவேணும் (௰௧)

(வ்-ம) (௧) "శాక్యోలూక్యాక్షపాదక్షపణకకపిలపతంజలిమతానుసారిణః-
சாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணக கபிலபதஞ்ஜலி மதாநுஸாரிண:" என்கிறபடியே, பாஹ்யஷண்மதங்களாகிற மூடிக்கிடக்கிற செடிகளை மூலச்சேதம் பண்ணியருளினவர் நித்யமாக வாழ்ந்தருளவேணும் மேலிட்டுவரும் குத்ருஷ்டிகளை (௨) "நான் மறையும் நிறக்ககுறும்புசெய் நீசருமாண்டனர்" என்கிறபடியே, ஸவாஸநமாகத் துரத்தியருளினவர் நித்யமாக வாழ்ந்தருளவேணும் (௩) "அறுசமயம்போனது பொன்றியிறந்தது வெங்கலி" என்கிறபடியே, இவைத்துக்கெல்லாம் ஹேதுவாய், லோகமெங்கும் காட(ஈடு)மாய் மூடிவருகிற கலியை, அல்பாவஶேஷமுமில்லாதபடி மு

(௧) வேதார்த்தஸங்க்ரஹ (௨) இரா நூ-௩௩ (௩) இரா-நூ-௪௪

டித்துவிட்டவர், வாழ்ந்தருளவேணும் அனந்தரம் "ஶ்ரீமந் ஶ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய – ஸ்ரீமந் ஸ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய" என்கிறபடியே, பெரியபெருமாளுடைய திருச்செல்வமெல்லாம் க—ணாப்படிம்படி பண்ணியருளினவர் வாழ்ந்தருளவேணும்

அதுக்குமேலே ப்ரமாணத்தில் வந்தால் வேதத்தில் விப்ரதிபத்திபோக்கினவளவன்றிக்கே, வேதாந்தார்த்தமெல்லாம், ஸ்ரீபாஷ்யரூபேண அருளிச்செய்தவர் வாழ்ந்தருளவேணும் அதுக்குமேலே ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்ட திருவாய்மொழியை, (க) "வளர்த்த இதத்தாய்" என்னும்படி வர்த்திப்பித்தருளினவர் வாழ்ந்தருளவேணும் அதின் தாத்பர்யமான ஶாஜ்ஞத்தாமம் ஜகத்திலே வர்த்திக்க விலக்ஷணமான ஸ்ரீபெரும்பூதூரிலே யவதரித்தருளினவர் வாழ்ந்தருளவேணும் ஸௌந்தர்யாதிகளாலே பூர்ணராயிருக்கிற வெம்பெருமானுடைய ஸர்வஶரண்யமான சரணயுகளங்கள் நித்யமாகவாழவேணும் அழகாருமை—அடியிணைகளுக்கு விசேஷணமானபோது இரண்டு தாமரைப்பூவை நிறைத்து வைக்கப்போலேயிருக்கிற சோதிப்பழமையும், ஸ்வத: உண்டான ஸௌந்தர்யத்தையும் சொல்லுகிறதாகவுமாம் அறம்மிகுநல் பெரும்பூதூர்' என்று பாட்டுச்சொல்லுவார் அப்போது (உ) 'இராமாநுசன் மிக்கபுண்ணியன்'' என்கிற, தர்மத்தை அதிகமாக உடைத்தென்னவுமாம் வாழியென்பது மங்களச்சொல் (௩௧)

(அ-கை) கீழறமிகுநற்பெரும்பூதூர் அவதரித்தாரென்று ப்ரஸ்துதமான திருவவதார திருநக்ஷத்ரவைபவத்தை ப்ரீதியாலே பேசி அநுபவித்தருளுகிறார்

சங்கரபாற்கரயாதவ பாட்டப்ரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர்மாய்குவரென்று சதுமறைவாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலை யென்றுமிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமை யாறுமெனத்துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளிபராங்குசமுன்னவர் வாழ்வுமுளைத்திடுநாள்
மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்

---

(க) திருவாய்மொழித்தனியன் (உ) இரா நூ ௬௧

செங்கயல்வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த பெரும்பூதூர்
சீமானிளையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே (௩௨)

சங்கர = சங்கரன் மதம், பாஸ்கர = பாஸ்கரன் மதம், யாதவ = யாதவ ப்ரகாசன் மதம் பாட்ட = பாட்டமதம், ப்ரபாகரர் தங்கள் மதம் = ப்ரபாகரன் மதம், (இவையெல்லாம்) சாய்வுற = நாசத்தை யடையா நிற்கையில், வாதியர் = வாதியர்களான ஸங்கராதிகளும், மாய்குவரென்று = ஜயமின்றி நசிப்பார்களென்று, சதுமறை = நாலுவேதங்களும், வாழ்ந்திடுநாள் = ஆத்மபௌஷ்கல்யத்தை யுடைத்தாய் அபிவிருத்தமாம் திவஸம், வெங்கலி = க்ரூரமான கலியும், இங்கினி வீறுமக்கிலையென்று = இவ்விடத்தி லினி நமக்கு ஸாமர ஜயம் பண்ண ஶக்யமன்றென்று, மிகத்தளர்நாள் = மிகவும் நிலைகுலைந்திருக்கப்பண்ணுவதான திருநக்ஷத்ரம், மேதினி = பூமியும், நம் சுமை = நம்தலைச்சுமை, ஆறுமென்ன = கழியுமென்று, துயர்விட்டு = துக்கத்தைவிட்டு, விளங்கியநாள் = ப்ரகாசியா நின்ற திருநக்ஷத்ரம், (இனி பூமியிலுண்டான ஆசார்யஸ்தலங்களை யாதரிக்குமவர்களாகையாலே) மங்கையராளி = திருமங்கையாழ்வாருடையவும், பராங்குச = நம்மாழ்வாருடையவும் முன்னவர் = மற்ற பூர்வாசார்யர்களுடையவும், வாழ்வு = ஸம்பத்து, முளைத்திடுநாள் = அங்குரிக்கும் திருநக்ஷத்ரம், மன்னிய = பெரியபெருமாள் நித்யவாஸம்பண்ணுகிற, தென்னரங்காபுரி = அழகிய அரங்கமாநகரமும், மாமலை = பெரியதிருமலையும், மற்றும் = மற்றுமுண்டான திவ்யதேசங்களும், உவந்திடுநாள் = ஆநந்திக்கும் திருநக்ஷத்ரம் செங்கயல் வாவிகள் = சிவந்தழகிய மத்ஸ்யங்களையுடைய தடாகங்களால், சூழ் = சூழப்பட்டிருக்கிற, வயல் = விளைவயல்களின்மேல், நாளும் = நித்யமாக உண்டான, சிறந்த = அலங்காரங்களை யுடைத்தாயிருக்கிற, பெரும்பூதூர் = ஸ்ரீபெரும்பூதூரை அவதார ஸ்தலமாகவுடைய, சீமானிளையாழ்வார் = ஸ்ரீமானாய இளையாழ்வாரென்று நிரூபகத்தை யுடையரான வெம்பெருமானார், வந்தருளியநாள் = வந்தவதரித்தருளின திநம், திருவாதிரைநாளே = திருவாதிரைத் திருநக்ஷத்ரம், (இதுவுமொருநாளே! "ஸ்ரீமாநாவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர" என்னக்கடவதிறே) (௩௨)

(வ-ம) விசேஷணத்தை இல்லைசெய்வாரும், விசேஷ்யத்தை இல்லைசெய்பவருமாய இப்படி வி[illegible]பாகதவயதிருஷ்டிகளாய்க் கொண்டு வேகார்த்தாபலாபம் பண்ணுகிறவர்களாகையாலே, வைதிகதாமம் தலைசாயும்படிவந்து கிடடியிருக்கிறவாதியர்களான சங்கராதிகளுடையமதம் நாசத்தை யடையுமென்று நாலுவகைப்பட்ட வேதமானது ஆத்மபௌஷ்கல்யத்தை யுடைத்தா யபி(வி)வருத்தமாம் திவஸம்

(௧) "கலியும் கெடுங்கண்டுகொண்மின்" என்று சொல்லுகிறபடியே, க்ரூரமான கலியானது இவ்விடத்தில் இனி நமக்கு ஸாம்ராஜ்யம்பண்ண ப்ரஸக்யமன்றென்று மிகவும் நிலைகுலைந்து நிற்கப்பண்ணவற்றான திருநக்ஷத்ரம் கலியும், கலிகார்யமான குத்ருஷ்டிகளும் போகையாலே, "విశ్వంభరా పుణ్యవతీ விஶ்வம்பரா புண்யவதீ" என்றும், (௨) "தவந்தாரணி பெற்றது" என்றுஞ் சொல்லுகிறபடியே, பூமியானது, நம் தலைச்சுமை கழியுமென்று துக்கத்தைவிட்டு ப்ரஸாதியாநிற்கிற திருநக்ஷத்ரம், இனி பூமியிலுண்டான வாசஸ்தலங்களை யாதரிக்குமவர்களாகையாலே, திருமங்கைக்கு நிர்வாஹகரான திருமங்கையாழ்வார், பராங்குசாபி(భి)தேயரான நம்மாழ்வார் முதலானவர்களுடைய ஸம்ருத்தி அங்குரிக்கும் திருநக்ஷத்ரம்

அதுக்குமேலே, பெருமாள் நித்யவாஸம் பண்ணுகிற கோயில், (௩) "அருவிசெய்யாநிற்கும் மாமலை" என்று சொல்லப்படுவதான பெரியதிருமலை, மற்றுமுண்டான திவ்யதேசங்களும், ஸ்வஸ்வ ஸம்ருத்தியையடைவுதோமென்று, ஹர்ஷிக்கும் திருநக்ஷத்ரம் இதுக்கெல்லாமடியாய், (௪) "அங்கயல்பாய்வயல்" என்னுமாபோலே, சிவந்தழகிய கயல்களையுடைத்தான வாவிகளாலே சூழப்பட்டிருக்கிற விளைவயல்களினாலே நித்யமாகவுண்டான நகராலங்காரங்களை யுடைத்தாயிருக்கிற, ஸ்ரீபெரும்பூதூரை அவதாரஸ்தலமாகவுடைய ஸ்ரீமானாய், இளையாழ்வாரென்று நிரூபகத்தையுடையரான எம்பெருமானார் அவதரித்தருளின திவஸம் திருவாதிரை திருநக்ஷத்ரம்

இதுவொருநாளே! "శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః ஸ்ரீமானாவிரபூத்பூமௌ ராமாநுஜதிவாகர:' என்னக்கடவதிறே - "தென்னரங்கர்புரிமாமலைமற்று முவந்திடுநாள்" என்கிறதுக்கு, தத்ஸ்தரான ஜீவேஶ்வரர்கள் ஹர்ஷிப்பார்களென்றபடி, மன்றல்=பொருந்தலும், நிலைப்பாடும் ஆறுதல்=சமித்தல் (௫) "உன் நாமமெல்லாம் என்றன் நாவினுள்ளே யல்லும்பகலும் மரும்படிநல்கு" என்கிறபடியே, இவருக்கு தத்வாசகமான திருநாமங்கள்தான் அநுபாவ்யங்களாயிருக்கையாலே, எதிராசனென்றும், இராமாநுச

(௧) திருவாய் ௫-௨-௧ (௨) இரா நூ ௪௫ (௩) திருவி-
(௪) இரா-நூ-௧ப (௫) இரா-நூ-தனியன்

னென்றும், எம்பெருமானாரென்றும், இளையாழ்வாரென்றும் மநுஸந்தித்தருளினார் (ரு௨)

(அ-கை) கீழ்ப்ராஸங்கிகமாய வந்த மங்களாஶாஸநத்திலே மண்டியநுபவித்து, "ப்ராஸங்கிகம் பரிஸமாப்ய ப்ரக்ருதமநுஸராமி"-ப்ராஸங்கிகம் பரிஸமாப்ய ப்ரக்ருதமநுஸராமி" என்கிறபடியே, மீளவும் ப்ரக்ருதத்திலே இறங்கி, ஸர்வலோகத்திலேயுண்டான ஸர்வத்ரிகங்களும் போம்படியவதரித்து ரக்ஷித்தருளினப்போலே, அடியேனுடைய வஜ்ஞானத்தைப்போக்கி யடிமைகொண்ட ஸ்வாமியானவரே! அடியேனுடைய ப்ரக்ருதிஸம்பந்தநிபந்தநமாயுண்டான தேஹஸம்பந்தவிமோசந காலாதிநியமங்களையெல்லாமறிந்தருளும் ஸர்வஜ்ஞரானதேவர், அஜ்ஞனானவடியேனை விலக்ஷணமான தேசத்திலே ஆரோஹிப்பித்தருளத் திருவுள்ளமாகில், விஸம்ரித்திருக்கிறதுக்கு ஹேதுவேதென்று அவர் தம்மையே கேட்கிறார் (ரு௨)

இன்னமெத்தனைகாலமிந்த வுடம்புடனியானிருப்பன்
இன்னபொழுதுடம்பு விடுமின்னபடியதுதான்
இன்னவிடத்தே யதுவுமென்னு மிவையெல்லாம்
எதிராசா நீயறிதி யானிவையொன்றறியேன்
என்னையினி யிவ்வுடம்பை விடுவித்துன்னருளால்
வானுலகிலேற்றுதற்கு நினைவுண்டேல்
பின்னைவிரையாமல் மறந்திருக்கிறதென்பேசாய
பேதைமைதீர்த்தென்னையடிமைகொண்டபெருமானே (ருரு)

இன்னம் = இன்னமும், எத்தனைகாலம் = எவ்வளவுகாலம், இவ்வுடம்புடன் = ஹேயமான இந்த தேஹத்தோடே, யானிருப்பன் = இதில் பொருத்தமற்றிருக்கிற வடியேனிருப்பேன், இன்னபொழுதுடம்புவிடும் = இன்னகாலத்திலே தேஹமவிடும், இன்னபடி = இன்ன ப்ரகாரத்திலே, அதுதான் = அந்த தேஹவியோகந்தான், இன்னவிடத்தே = இன்னஸ்தலத்திலே, அதுவும் = அந்த தேஹவிமோசநமாம், என்னுமிவையெல்லாம் = என்று சொல்லப்படுகிற விவையெல்லாம், எதிராசா = எம்பெருமானாரே! நீயறிதி = ஸர்வஜ்ஞரான தேவர் அறிந்தருளுவீர், யான் = அஜ்ஞனான வடியேன், இவையொன்றறியேன் = இவற்றில் லேசதேசமுமறியேன், (ஆனபின்பு) பேதைமைதீர்த்து = அஜ்ஞானத்தைப்போக்கி, என்னை = அடியேனை, அடிமைகொண்டபெருமானே = ஆட்கொண்டஸ்வாமீ! என்னை =

இத்தேஹத்தோடே பொருந்தமற்றிருக்கிற வடியேனை, இனி - உன்னருளால்=இனி தேவரீர் க்ருபையாலே, இவ்வுடம்பை விடுவித்து= இச்சரீரத்தை விடுவித்து, ஏராரும்=திவ்யாலங்கார பரிபூர்ணமான, வைகுந்தத்தேற=பரமபதத்திலேயேற, நினைவுண்டேல் = திருவுள்ளமுண்டாகில், பின்னை=அநந்தரம், விரையாமல்=த்வரியாமல்,மறந்திருக்கிறதென்=நிருத்யோகராய் விஸ்மரித்தெழுந்தருளி யிருக்கிறதற்கு ஹேதுவேது? பேசாய்=அதனை யருளிச்செய்தருளீர் (௧௧)

(வ-ம்) தத்த்வஸம்பந்தஜ்ஞாநஸூந்யதையாகிற மௌர்க்க்யத்தைப்போக்கி, சேஷபூதனானவடியேனை, (௧) "வினையேனையுனக்கடிமையறக்கொண்டாய்" என்கிறபடியே, சேஷத்வாநுகுணமாக தாஸ்யத்தைக்கொண்டருளின ஸ்வாமியானவரே! இன்னமெத்தனைகாலாவதி இந்தஹேயமானதேஹத்தோடே, இதில் பொருந்தமற்றிருக்கிற நானிருப்பன், "இன்னகாலத்திலே தேஹம் முக்தமாம், இன்னப்ரகாரத்தாலே இந்த தேஹவிமோசனம், இந்த ஸ்தலத்திலே" என்று சொல்லப்படுகிற விவையெல்லாம், எதிகளுக்கு நாதராய், ஸர்வஜ்ஞானதேவர் அறிந்தருளுவீர். அஜ்ஞனான நானிவற்றிலேகதேசமு மறியேன்

ஆனபின்பு, இத்தேஹத்தோடே பொருந்தமற்றிருக்கிறவென்னை, இனிதேவர் க்ருபையாலே இச்சரீரத்தை விடுவித்து, திவ்யாலங்காரபரிபூர்ணமான பரமபதத்திலே ஏற்றத் திருவுள்ளமுண்டாகில், அநந்தரம், (௨)"விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்" என்கிறபடியே த்வரியாமல் நிருத்யோகராய், விஸ்மரித்தெழுந்தருளியிருக்கிறதற்கு ஹேதுவேது? அதனை யருளிச்செய்தருளீர் தேவர்க்கு க்ருபையுண்டாயிருக்க விளம்பஹேதுவான ஸாதநமித்தலையி லில்லையாயிருக்க, காலவிளம்பம் காரியமென்னென்று கருத்து, "அமர்ந்திருக்கிற தென்பேசாய்" என்றுபாடஞ்சொல்லுவர் நினைவுண்டேலென்று, ஸித்தவத்கரிக்கிறதாகவுமாம் (௧௧)

(அ-கை) நமக்கு க்ருபையுண்டானாலும், எத்தனை தயாவான்களையும், நிரக்கருணராம்படி பண்ணுமதான உம்முடைய ப்ரபல ப்ரதிபந்தகங்கள் கிடந்ததேயென்று எம்பெருமானார்க்கு நினைவாக, (௩)"[illegible] ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி"

(௧) திருவாய் ௪ ௧-௧ (௨) திருவாய்-௧௦ ௬ ௩ (௩) கீ-௧௮-௬௬

என்கிற ஸர்வேஶ்வரன், தேவர்க்கு விதேயனன்றோ? ஆகையால், கவர்த்தநீயனான நான் பாபபலங்களைப் புஜியாமல், முக்தனாம்படி பண்ணவேணுமென்கிறார்.

முன்னைவினைபின்னைவினை யாரத்தமென்னும்
　　மூன்றுவகையான வினைத்தொகையனைத்துமயானே
என்னையடைந்தோர் தமக்குக் கழிப்பனென்னும் அரங்கர்
　　எதிராசா நீயிட்டவழக்கன்றோ சொல்லாய்
உன்னையல்லதறியாத யானிந்தவுடம்போ
　　டுழன்றுவினைப்பயன் புசிக்கவேண்டுவதொன்றுண்டோ
என்னுடையவிருவினையை யிறைப்பொழுதில் மாற்றி
　　ஏராருமவைகுந்தத்தேற்றி விடாய் நீயே (௩௪)

முன்னைவினை = பூர்வாகம், பின்னைவினை = உத்தராகம், ஆரத்தம் = ப்ராரப்தம், என்னும் = என்று சொல்லப்படுகிற, மூன்றுவகையான = மூன்று ப்ரகாரங்களான, வினைத்தொகை = பாபஸமூஹங்கள், அனைத்தும் = அகிலத்தையும், யானே = ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ விசிஷ்டனான நானே, என்னை = வாத்ஸல்யாதி குணவிசிஷ்டனான வென்னை, அடைந்தோர் தமக்கு = அநந்யசரணராய் சரணவரணம் பண்ணின ப்ரபந்நரானவர்கள் தங்களுக்கு, கழிப்பனென்னும் = அப்படிப்பட்ட வகிலபாபத்தையும் ஸவாஸநமாகப் போக்குவனென்றருளிச்செய்த, அரங்கர் = திருவரங்கரான பெரியபெருமாள், எதிராசா = யதிகளுக்கு நாதரானவரே! நீயிட்டவழக்கன்றோ = தேவருக்கு விதேயரன்றோ? சொல்லாய் = அருளிச்செய்ய வேணும், (இவ்வர்த்தம் யதார்த்தமென்னுமது தேவர் அருளிச்செய்ய லாகாதோ?) உன்னையல்லது = (இப்படி ஈஶ்வரவஶீகாரத்தையுடைய) தேவரையொழிய, அறியாத = வேறொரு ரக்ஷகனையுமறியாத, யான் = அடியேன், இந்தவுடம்போடு = இச்சரீரத்தோடு, உழன்று = பொருந்தி அது வேயாத்ரையாக விருந்து, வினைப்பயன் = தத்கார்யமான பாபபலங்களை, புசிக்கவேண்டுவதொன்றுண்டோ? அநுபவிக்கவேணுமென்றொரு நிர்ப்பந்தமுண்டோ? என்னுடைய = அடியேனுடைய, இருவினையை = ப்ரபலபாபத்தை, இறைப்பொழுதில் = க்ஷணகாலத்திலே, மாற்றி = ஸவாஸநமாகப் போக்கி, ஏராரும் = அழகுநிறைந்துள்ள, வைகுந்தத்தேற்றிவிடாய் = வைகுந்தமாநகரத்திலேற்றி விட்டருளீர், நீயே = தேவரீரே யென்கிறார் (௩௪)

(வ-ம) "పూర్వాఘముత్తరాఘఞ్చ సమారబ్ధమఘంతథా - பூர்வாகமுத்தராகஞ்ச ஸமாரப்தமகந்ததா" என்கிறபடியே, பூர்வாகமுத்தராகமாரப்தமென்று சொல்லப்படுகிற, வாகத்ரயமான பாபஸமூஹங்க

ளான வெல்லாவற்றையும், (௧) "మామేకం శరణం వ్రజ, అహం త్వా సర్వ పాపేభ్యో మోక్షయిష్యామి-மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று, ஸஹாயாந்தர நிரபேக்ஷனாய்க்கொண்டு ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ விசிஷ்டனானவனே, வாத்ஸல்யாதி குணவிஶிஷ்டனானவென்னை அநந்யஶரணராய் ஶரணவரணம்பண்ணின ப்ரபந்நரானவர்கள் தங்களுக்கு அப்படிப் பட்ட வகிலபாபத்தையும் ஸவாஸநமாகப்போக்குவனென்றருளிச்செய்த செம்மையுடைய திருவரங்கரான பெரியபெருமாள், எதிகளுக்கு நாதரானவரே! (௨) 'వశ్యస్సదాభవతి తే-வஶ்யஸ்ஸதாபவதி தே" என்கிறபடியே த்வத்தீ(దధీ)நரன்றோ? இவர் தத்தம் யதார்த்தமென்னும்மதுதேவர் தாமருளிச்செய்யலாகாதோ? இப்படி ஈஶ்வர வஶீகாரத்தையுடைய தேவரையொழிய, வேறொரு ரக்ஷகாந்தரமறியாதே அநந்யகதியாயிருக்கிற நான் இந்தத்தேஹத்தோடே பொருந்தி அதுவே யாத்ரையாகவிருந்து, தத்கார்யமான பாபபலங்களை புஜிக்கவேணுமென்றொரு நிர்ப்பந்தமுண்டோ? பாபங்களுக்கு மெனக்கு மென்ன சேர்த்தியுண்டு? இப்படியானபின்பு என்னாலே அநுபாவ்யமாயிருக்கிற ப்ரபலகர்மங்களை, (௩) "கடிவார் தீயவினைகள் நொடியாருமளவைக்கண்" என்கிறபடியே க்ஷணகாலத்திலே ஸவாஸநமாகப் போக்கி நான் தரைக்கிடைகிடவாமல் ஏர்கொள்வைகுந்தமாநகரத்திலே த்வதேகபரமாயற்றபின்பு ஏற்றிவிட்டருளீர். ஏர் = அழகு ஆக்கல் = மிகுதி (௩௪)

(அ-கை) அடியேனுடைய ஸகலப்ரதிபந்தகங்களைப்போக்கி, ரக்ஷித்தருளுகையிலே யத்நம்பண்ணியருளுகிறதேவர், க்ருபையாலே நித்யகைங்கர்யங்கொண்டருள ஸங்கல்பித்திருக்க, அத்தையு †மதிக்ரமித்துப்போவதான வென்னுடைய ருசிவிரோதியாயிருக்கிற இந்த்ரியபாரவஶ்யத்துக்கடியானபாபங்களைப்போக்கி, த்வதேகமநாவாம்படி பண்ணியருளவேணுமென்கிறார்

அருளாலேயடியேனை யபிமானித்தருளி
அநவரதமடிமைகொள்ள நினைத்து நீயிருக்க
மருளாலேபுலன்போக வாஞ்சைசெய்யுமென்றன்
வல்வினையை மாற்றியுன்பால் மனம்வைக்கப்பண்ணாய்

(௧) கீ-௧௮-௬௬ (௨) யதிராஜவிம்ஶதி (௩) தி-வாய் ௧-௩ ௧௦

† அதிக்ரமித்து

தெருளாரும் கூரத்தாழ்வானு மவர்செல்வத்
திருமகனார் தாமு மருளிச்செய்த நீமைத்
திரளானவத்தனையுஞ் சேரவுள்ளவென்னைத்
திருத்திப்பயக்கொள்ளும் வகை தேருமெதிராசா (௫௬)

அருளாலே = கிருபையாலே அடியேனையபிமானித்தருளி = அடியேனை அகுறைக்கு அநந்யார்ஹனாம்படி யபிமானித்தருளி, அநவரதம் = நிரந்தரம், அடிமைகொள்ள = நித்யகைங்கர்யம் கொண்டருள, நினைந்திருக்க = தேவர் திருவுள்ளம் பற்றியிருக்க, மருளாலே = அதையறிய வொட்டாத அஜ்ஞாநத்தாலே, புலன் = இந்த்ரியங்களினுடைய, போக = விஷயபோகங்களை வாஞ்சை செய்யும் = அபேக்ஷிக்கின்ற, என்றன் = அடியேனுடைய, வல் = ப்ரபலமான, வினையை = கர்மங்களை, மாற்றி = அதிலின்றும் முகம் மாறப்பண்ணி, உன்பால் = தேவர் விஷயத்தில், மனம்வைக்க = மங்களாஸாஸநம் வைக்கும்படி, பண்ணும் = பண்ணியருளவேணும், தெருளாரும் = ஜ்ஞாநபரிபூர்ணரான, கூரத்தாழ்வானும் = ஸ்ரீகூரேசரும், அவர் செல்வத்திருமகனார் தாமும் = அவர் திருவயிற்றிலே யவதரிக்கும்படியான ஸ்ரீயையுடையரான பெரியபட்டரும், அருளிச்செய்த = தந்தம் வாக்யங்களை யருளிச்செய்த, நீமைத்திரளான = பாபஸமூஹங்களான, அத்தனையும் = எல்லாவற்றையும், சேரவுள்ள = சேரவுண்டான, என்னை = அடியேனை, திருத்தி = செயல் நன்றாகத் திருத்தி, உய்யக்கொள்ளும் = உஜ்ஜீவிக்கப்பண்ணியருளும், வகை = ப்ரகாரத்தை, எதிராசா = எம்பெருமானாரே! தேரும் = சிந்தித்தருளும் (௧௬)

(வ்ய) (க) "కూరనాథభట్టాఖ్య దేశికవరోక్త సమస్తనైచ్యమ్, అద్యాస్త్య ஸங்குசிதமேவ-கூரநாதபட்டாக்ய தேசிகவரோக்த ஸமஸ்தநைச்யம் | அத்யாஸ்த்ய ஸங்குசிதமேவ" என்கிறபடியே, ஜ்ஞாநபரிபூர்ணரான கூரத்தாழ்வானும், அவர் திருவயிற்றிலே யவதரிக்கும்படியான ஸ்ரீயையுடையராய், அதடியாக, (உ) "శ్రీరఙ్గరాజకమలాపదలాలితత్వమ్- ஸ்ரீரங்கராஜகமலாபதலாலிதத்வம்" என்னும்படி, ஸ்ரீமத்குமாரரான பெரியபட்டர் தாமும் ஸ்வஸ்வநைச்யங்களை (௩) "యద్వ్యచని చ- புதவாசகேசு" (௪) "అతిక్రామన్నాజ్ఞామ్-அதிக்ராமந்நாஜ்ஞாம்" இத்யாதிகளாலே அருளிச்செய்த பாபஸமூஹங்களானவை பொன்றொழியாமல் எல்லாஞ்சேரவுண்டானவென்னை (௫) "செயல்நன்றாகத்திருத்திப் பணிகொள்வான்" என்னும்படி, திருத்தி யுஜ்ஜீவிக்கப்பண்ணி

(க) யதிராஜவிம்சதி (உ) ர-ஸ்த-உ-௧௭ (௩) வர-ஸ்த-௯௧
(௪) ர-ஸ்த (௫) கண்ணி-௧0

க்கொண்டருளும் ப்ரகாரம் சிந்தித்தருளுமவரே! தேவருடைய கேவலக்ருபையாலே, அடியேனை அங்குமறைக்கக்கயாலும்படி யபிமானித்தருளி நிரந்தரம் நித்யகைங்கர்யங்கொண்டருள தேவர் திருவுள்ளம்பற்றியிருக்க, அத்தையறியவொட்டாத வஜ்ஞானத்தாலே, (௧)“[illegible]ஶப்தாதிபோகருசிரந்வஹமேததேஹா” என்கிறபடியே, இந்திரியபரிச்சிந்நங்களான விஷயபோகங்களிலே வாஞ்சையைப்பண்ணும் என்னுடைய அநிவார்யமான ப்ரபலகர்மங்களை, அதில் நின்றும் முகமாற்றிப்பண்ணி, (௨) “தன்பால் மனம் வைக்கத்திருத்தி” என்கிறபடியே, ப்ராப்தஶேஷியான தேவர் விஷயத்திலே மநஸ்ஸை வைக்கும்படி பண்ணியருளவேணும் யத்நவ்யமாக யோஜிக்கவுமாம் (௫௫)

(அ-கை) “மருளாலே புலன்போகவாஞ்சைசெய்யு மென்றன் வல்வினையைமாற்றி” என்றபின்பு மனம் வைத்ததடையாகக் காண்கைப்பாலே, அத்யந்தஹேயமாயிருக்கிற விஷயாநுபவஸங்கவாஞ்சையானது அடியேனுடைய மநஸ்ஸை, பலாத்காரத்தோடே தான் மேலிடாநின்றது. அதுக்கு ஹேது வாஸநாகர்மங்களின்னதென்றறியே னென்கிறார்

நேரிசை வெண்பா

‡வாசனையி லூற்றமோ மாளாத வல்வினையோ
ஏதென்றறியே னெதிராசா—நீதரும்
ஐம்புலனி லாசை யடியேன் மனந்தன்னை
வன்புடனே தானடரும் வந்து (௫௬)

எதிராசா= எம்பெருமானாரே! நீதரும் = இவ்வாத்மாவுக்கு அத்யந்தம் பொல்லாங்காயிருக்கிற, ஐம்புலனில் — பஞ்சேந்த்ரிய பரிச்சிந்நமான விஷயஸங்கங்களில், ஆசை= அபேக்ஷையானது, அடியேன்= அடியேனுடைய, மனந்தன்னை= மநஸ்ஸை, வன்புடனே= பலாத்காரத்தோடே, தானவந்து= தானே மேலிட்டுப்பூந்து வந்து, அடரும்= மேலிடாநின்றது விஷயங்களில் மூட்டுவதாகத் தான் மேலிடாநின்றது, (இந்த ருசிக்கு ஹேது) வாசனையில்= அநாதிபாபவாஸனையிலே பற்றியிருக்கிற, ஊற்றமோ= த்ராட்யமோ, மாளாத= ப்ராயஶ்சித்தவிநாஶ்யமாய் அநுபவவிநாஶ்யமாய்த் தலைநிற்கவே யிருப்பதான, வல்வினையோ= அடியேனுடைய பாபகர்ம

(௧) யதிராஜவிம்ஶதி. (௨) தி-வாய்-௧-௫-௰. ‡ வாதனை.

ரோ, என்னு = எதுவென்று, அறியேன் = அறிகிறிலேன், (இதுக்கு காரண மின்னதென் றறிந்து அதனை தேவரே நிவர்த்திப்பித்தருளவேணு மென்று கருத்து) (௬௩)

(வ-ம்) இவ்வாத்மாவுக்கப்பந்தம் பொல்லாங்குதானுயிருக்கிற (௧) "ஐங்கருவிகண்ட இன்பம்" என்னும்படி இந்த்ரியபரிச்சிந்நமான விஷயங்களிலபேக்ஷை (௨) "హరన్తి ప్రసభం మనః-ஹரந்திப்ரஸபம் மந:" என்கிறபடியே, தேவர் திருவடிகளைப் பற்றியிருக்கிற அடியேனுடைய மனஸ்ஸை மேல் விழுந்து வந்து, பலாத்காரத்தோடே விஷயங்களிலே மூட்டுவதாகத்தான் மேலிடாநின்றது இந்த ருசிக்கு ஹேது (௩) "దుర్వాసనాదృఢీకృతస్పృహయం ద్రియోత్థం హాతుం న మే మతిరలం వరదాధి రాஜ துர்வாஸநாத்ருடீக்ருதஸ்ப்ருஹமிந்த்ரியோத்தம் ஹாதும் நமே மதிரலம் வரதாதிராஜ" என்கிறபடியே அநாதிபாபவாஸனையிலே பற்றியிருக்கிறதாட்டமோ? அன்றிக்கே (௪) "மறுயிலேன் வல்வினையே மாளாதோ" என்னும்படி அதுக்குமடியான பூர்வவிகாஸ்யமாதல், ப்ராயஸ்சித்த விநாஸ்யமாத லன்றிக்கே யிருப்பதான வென்னுடைய ப்ரபலகர்மமோ? இதேதென் றறிகிறிலேன், இதுக்கு நிதானமின்னதென்றறிந்து, அதனை தேவரே நிவர்த்திப்பித்தருள வேணுமென்று கருத்து அடருகை=மேலிடுகை. "அருளாலே" "வாழ்வீர்" என்கிற விளியோட்டாலும் ஐம்புலனென்று விஷயங்களைச் சொல்லுகிறது (௬௪)

(அ-கை) நீர் இந்த்ரியங்களினுடைய தோஷத்தை யநுஸந்தித்துப் பதறுகிறீர் நாம் தாமும் அவற்றின்கையிலே காட்டிக்கொடோமாகிலும், இப்படி பதுங்கிறவுங்களை ஸம்ஸாரத்திலே வைக்கிறது—"ஆர்த்தி-அதிகாரபூர்த்திக்கென்னும் முக்யம்" என்கிறபடியே இத்தாலே நிறம் பெறுவதான வார்த்தாதிகாரம் பிறக்குந்தனையுமாகிலும் ஆகையால் அதுபிறந்தவுடனே உம்முடைய அபேக்ஷிதத்தைச்செய்து நல்கட்டுக்கொள்ளுகிறோமென்று எம்பெருமானருளிச்செய்ய கருத்தாக, இவ்வளவாகவில்லாதவதிகாரம் இனிமே லென்னவுண்டாகப்புகுகிறது இந்த வதிகாரஸம்பத்தியுமுண்டாகி அபேக்ஷிதமவிக்நத்துக்கு விரோதியான பாபஸமூஹத்தைச் சேதித்து ப்ராப்யதேசத்தை ப்ராபிப்பிவிக்கைக்கு ஹேது வேதென்கிறார்.

(௧) திருவாய்-௪-௯-௧௦. (௨) கீ ௨-௬௦
(௩) வர ஸ்த-௭௮ (௪) திருவாய்-௩-௨-௫.

இனறளவுமிலலாத வதிகாரமேலுமெனக
கெனறுளதாம சொலலா யெதிராசா—ஒனறு
மினைதொடரை வெட்டிவிட்டு மேலைவைகுநதத
தெனனைககடுக வேறறுததென? (௩௭)

இனறளவும=இபபோதளவும, இலலாவதிகாரம = இலலாத அதி
காரம, மேலும= இனிமேல, எனககு = அடியேனுககு, எனறுளதாம=
எபபோ துணடாகும? (இபபோ துணடாகாததோ இனிமேலுணடாகப
போகிறது) சொலலாய=இததை தேவா அருளிசசெயயவேணும, எதிரா
சா=எமபெருமானாரே, ஒனறு=ஒனறுலும நசியாமலிருபபதான,வினைத
தொடரை = பாபாநு பநதததை, வெட்டிவிட்டு= சேதிததுப போகட்டு,
மேலை=ஸாவோததரமான, வைகுநததது=பரமபததில, எனை = அடி
யேனை, கடுக = சீகரமாக, ஏறறுதது = ஆரோபியாததறகு, என =
எனன காரணம? (௩௭)

(வ-ம) "இனறு திருநாடெனககருள வெணணுகினறாய"
எனனுமபடியான இனறளவுமிலலாதவதிகாரம இனிமேலெனறுண
டாவதாம. இபபோதுணடாகாததோ இனிமேலுணடாகிறது?
இததை தேவரருளிசசெயயவேணும இபபடிருசிவிரோதியாய, ஒ
னறுலும நசியாமலிருபபதான (க) "தொனமாவலவினைததொடா"
எனனுமபடியான பாபாநுபநததைகச சேதிததுபபோகட்டு (உ)
"மேலைவைகுநதததிருததும" எனகிறபடியே ஸாவோததரமான
தேசததிலே, அதிலபேகைஷயையுடையவடியேனை, அஜஞாநவஹா
மான ஸமஸாரததில நினறும சீகரமாக ஆரோபியாததறகு
ஹேதுவேது? எனனாலே எலலாம அஶகயமாய, தேவாராலே எல
லாம ஶகயமாயிருநதபினபு தாழககைககொரு ஹேதுவநதாயிலலை
யெனறுகருதது (௩௭)

(அ-கை) இனறளவு மிலலாதவதிகார மெனறததை, †தாக
கிகாபிபராயததாலே தாஶிபபியாநினறுகொணடு,ததஹேதுபூாவ
மாக வததையருளிசசெயகிறா

அஞஞிலதிபராதா ரைமபததிலும தாமறியாா
எனசொலெனககோ வெதிராசா—கெஞசம

(க) தி-வாய-௩-௨-௨ (உ) தி-வாய-௮-௬-௧௧ † வைஷிக

ஸ்ரஸமாயிருக்கிற வஸ்துவை அவரெப்படி யங்கீகரிக்கப் புகுகிறு ரென்று பாரம்யஸ்தாக்கபிப்ராயமாக, ஆஸ்ரயணத்தசையிலே குண ஹீநனாய், அத்தாலே விரஸனாயிருக்கிற வென்னுடைய தோஷத் தை போக்யமாக விரும்பி யங்கீகரித்தருளின வெம்பெருமானார் என்னை யுபேக்ஷித்தருளாரென்றுமக்கை ஸந்தாபமாக வருளிச் செய்கிறார்

வேம்புகறியாக விரும்பினர் கைத்ததென்று
தாம்புகடாதே புசிக்குந் தன்மைபோல—தீம்பனிவ
னென்றுநினைத்தென்னை யிகழா ரெதிராசர்
அன்றறிந் தங்கீகரிக்கையால் (௫௧)

வேம்பு=வேப்பிலையும், கறியாக=கறியமுதாக, விரும்பினர் தாம்= அபேக்ஷித்த தாங்கள், கைத்ததென்று = கைப்பாகவிருக்கிறதென்று, புக டாதே = உபேக்ஷியாதே, புசிக்கும் = புஜிக்கிற, தன்மைபோல = ஸ்வபாவம்போலே, தீம்பனிவனென்று = இவன் துஷ்டனென்று, நினைத்து=விசாரித்து, என்னை = அடியேனை, எதிராசர் = எம்பெருமா னார், அன்று=அக்காலத்தில் - அங்கீகாரஸமயத்தில், அறிந்து= தோஷ யுக்தனென்றறிந்து, அங்கீகரிக்கையால்=அந்த தோஷத்தையே போக்ய மாகக்கொண்டு அங்கீகரித்தருளுகையாலே, இகழார்=உபேக்ஷித்தருளார்

(வ-ம) அதாவது (௧) "வேம்புங்கறியாகுமென்று" என்கிற படியே, ஸரஸமானவற்றை யுபேக்ஷித்து, அத்யந்தம் கைப்பையுடை த்தாய், விரஸமாயிருப்பதான வேப்பிலை துடக்கமாயுள்ள தத்ஸம்ப ந்திபதார்த்தங்களைச் சோற்றுக்கு உபதம்ஸமாகவாதரித்து புஜிக்கு மவர்கள், அது விரஸமாய்க்கைத்ததென்று அதைவிரும்பிப் புஜிக் கும் தாங்கள் உபேக்ஷியாதே புஜிக்கும் ஸ்வபாவம்போலே அங்கீகா ரஸமயத்திலே தோஷயுக்தனென்றறிந்து, அதை போக்யமாகக் கொண்டங்கீகரித்தருளுகையாலே, எம்பெருமானா ரிப்போதிவனை தோஷயுக்தனென்று உபேக்ஷிக்கருளார் (௨) "ஸ்வீக்ருத்ய-ஸ்தயஜே யம்" என்னும்படி பிதோரங்கீகாரத்தாட்டிய பிருந்தபடியென்னெ ன்று கருத்து (௫௧)

(அ-கை) உம்முடைய தோஷம் பாராதே யங்கீகரித்தோமாகில் மேலுள்ளதும் நாமே க்ரமத்திலே செய்கிறோமென்று, எம்பெருமா

(௧) திருவ-கக (௨) ரா-யு-க௮ ௯

னுக்கு நினைவாகத் தவத்தநுபவயோக்யமான காலத்தை யெல்லாம் வ்யர்த்தமே போக்கி, அதுக்கு மேலான ஸம்ஸாரத்திலிராமல் அநுபவத்துக்குப் பாங்கான தேசத்திலே சேர்த்து, அதுக்கிடைச்சுவர்களைப் போக்கவேணுமென்கிறார்

அவத்தே பொழுதை யடியேன் கழித்துப்
பவத்தே யிருக்குமது பண்போ — சிவத்தேயான்
சேருமவகை யருளாய் சீரார் எதிராசா
போருமினி யிவ்வுடம்பைப் போக்கு (௪௰)

அடியேன் = தாஸபூதனான நான், பொழுதை = தேவருடைய வநுபவ கைங்கர்யங்களுக்கடைத்த விலக்ஷணமான காலமெல்லாம், அவத்தே = வ்யர்த்தமாக, கழித்து = போக்கி, இப்பவத்தே = விரோதியாயிருக்கிற இந்த ஸம்ஸாரத்தில், இருக்குமது = பொருந்தியிருக்கிறது, பண்போ = தேவருடைய க்ருபாஸ்வபாவத்துக்குச் சேருமோ? சிவத்தே = பரமபதத்தை, யான் = அடியேன், சேருமவகை = அடையும் ப்ரகாரத்தை, அருளாய் = க்ருபை செய்தருளீர், சீர் = ஸமஸ்த கல்யாணகுணங்களாலே, ஆர் = பூர்ணரான, எதிராசா = எம்பெருமானாரே! போரும் = ஸம்ஸாரத்தில் குறையிருப்பு போரும்-போரும், இனி இவ்வுடம்பை = இனி இந்தச் சரீரத்தை, போக்கு = போக்கியருளவேணும் (௪௰)

(வ-ம) தேவருடைய வநுபவ கைங்கர்யங்களுக்கடைத்தவிலக்ஷணமான காலமெல்லாம் அதுக்கிட்டுப்பிறந்த அடியேனப்படிப்பட்டவந்தப்பொழுதைப் பழுதே போக்கி, விரோதியாயிருக்கிற ஸம்ஸாரத்தில் பொருந்தியிருக்கிறது தேவர் க்ருபாஸ்வபாவத்துக்குப் போருமோ? ஆகையால் கைங்கர்யவர்த்த(ர்)கமாய், (க)"பரந்தாமமென்னுந்திவ்ய" என்னும்படியான தேசத்திலேயபேக்ஷையுடைய நான் கெடுமரக்கலங்கரைசேர்ந்தாப்போலே சேரும்ப்ரகார மிரங்கியருளவேணும் — ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணராய எதிகளுக்கு நாதரானவரே! ஸம்ஸாரத்தில் சிறையிருப்புப்போரும் இனி பகவத்ஸ்வரூபதிரோதாநகரியாய், விபரீதஜ்ஞாநஜநநியாய் ஆத்மாவோடே பொருந்தியிருக்கிற விந்தத்தேஹத்தைப் போக்கியருளவேணும், இதுவே புருஷார்த்தம், பண்பு = ஸ்வபாவம், "அடியேன் இப்பவத்தே இருக்குமதுபண்போ" என்று கீழோடே கூட்டவுமாம் (௪௰)

(க) இரா-நூ

(அ-கை) ஆனாலும் முன்புடைய தோஷபூயஸ்த்வத்தைப்பாராதே அருந்தேவைகளைச்செய்யும்படி சொல்லக்கடவீரோவென்னில்; அஸத்ருசாபராதனை வடியேனுடைய ப்ரசுரஸம்பந்த நிபந்தநமாய் வருமபராதங்களையெல்லாம் பொறுத்து ரக்ஷித்த மவரானபின்பு,ஸகலஜீவலோகஸமுஜ்ஜீவநார்த்தமாக வவதரித்தருளின தேவர், அதிசபலனானவெனக்கு தயைபண்ணி ரக்ஷிக்கவேணுமென்கிறார்.

என்னைப்போல் பிழைசெய்வா ரிவ்வுலகிலுண்டோ
உன்னைப்போல் பொறுக்கவல்லாருண்டோ — அனைத்துலகும்
வாழப்பிறந்த வெதிராச மாமுனிவா
ஏழைக்கிரங்காயினி. (௩௪)

என்னைப்போல் = அடியேனைப்போல், பிழை = அபராதத்தை, செய்வார் = செய்யுமவர்கள், இவ்வுலகிலுண்டோ = இந்த லோகமெல்லாம் தேடிப்பார்த்தாலும் கிடைப்பரோ? உன்னைப்போல் = தேவரைப்போலே, பொறுக்கவல்லா = ஸஹிக்கவல்லார், உண்டோ = உபயவிபூதியிலுண்டோ? அனைத்துலகும் = ஸமஸ்தலோகங்களும், வாழ = உஜ்ஜீவித்து வாழும்படியாக, பிறந்த = அவதரித்தருளின, எதிராச = யதிராச ரென்கிற திருநாமத்தையுடைய, மா = பூஜ்யரான, முனிவா = யோகிஜநாக்ரகண்யரே! ஏழைக்கு = சபலனாயிருக்கிற வடியேனுக்கு, இனி இரங்காய் = இனி தயை பண்ணியருளவேணும். (௩௪)

(வ்-ம்) (௧) "நிகரின்றி நின்றவென்னீசைக்கு" என்கிறபடியே அபராதம்பண்ணுமவர்களில் வைத்துக்கொண்டு, மாத்ருசாபராதக்ருத்துக்களாயிருக்குமவர்கள் இந்தலோகமெல்லாந் தேடிப்பார்த்தாலுங்கிட்டுமோ? (௧) "அருளுக்குமஃதேபுகல்" என்கிறபடியே அபராத ஸஹரில்வைத்துக்கொண்டு, தேவரைப்போலே ஸஹிக்கவல்லாருபயவிபூதியிலுண்டோ? ஸகலஜீவலோகமு முஜ்ஜீவித்து வாழும்படியாக வவதரித்தருளி, அவர்கள் ரக்ஷணத்திலே மநநம் பண்ணியருளுகிற வெம்பெருமானாரே! இப்படிக்கைகழிந்தபின்பு, பற்றினத்தைவிடாத சபலனாயிருக்கிற வெனக்கு தயைபண்ணியருளவேணும். (௨) "తదహం త్వదృతే న నాథవాన్ - ததஹம் த்வத்ருதே ந நாதவாந்" இத்யாதிவத். (௩௪)

---

(௧) இரா-நூ-௬௪. (௨) ஸ்தோ-ர-௫௰.

(அவதா) "இப்படி யதீந்த்ர ஸம்பந்தங்களை பாவிக்க ரிக்குமதிகாரிகளைப்பெற்றோமே" என்றருளிச்செய்து, எதிராசமாமுனியா னவெம்பெருமானார் இவர்க்கெளிப் பெரும்பேற்றைப்பெறுவைகளை மங் களபொன்றாதனது. இவருடைய ப்ரேமஸ்வபாவத்தைக் கடாக்ஷித் துக்கொண்டிருப்பதாகநிற்க, அதுபற்றாமல் அவர்க்கும் ரக்ஷித்த ல்லது நிற்கவொண்ணாதபடி (க)"உண்ணிலாவியவெ" என்றபடியே, இந்த்ரியபராக்ரமமான பாதகத்தாலே, தம்முடைய வருத்தத் வத்தை முன்னிட்டுக் கூப்பிடுகிறார்.

ஐம்புலன்கள் மேலிட் டடரும்பொழுதடியேன்
உன்பதங்கடம்மை நினைந்தோலமிட்டால் — பின்பவைதாம்
என்னையடராம லிரங்காய் எதிராசா
உன்னையல்லா லெனக்குண்டோ? (௪௨)

ஐம்புலன்கள் = பஞ்சேந்த்ரியங்கள், மேலிட்டு = ஆக்ரமித்து, அடரும்பொழுது = ஸ்வ ஸ்வ க்ரமப்படி ஸ்வ ஸ்வ விஷயங்களைக் காட்டிக் காட்டென்று துடர்ந்து பாதிக்கும் தசையிலே, அடியேன் = தேவர்க்குச் சேஷபூதனான அடியேன், உன் = தேவருடைய, பதங்கள் தம்மை = திருவடித் தாமரைகளை, நினைந்தே = (ஸ்ரீகஜேந்த்ராழ்வான், தேவஸம்வத்ஸரத்திலே ஆயிரம் ஸம்வத்ஸரம் முதலை நெருக்கிழுக்க, தான் கரைக்கிழுக்க வலிச்சல் பட்டு, அதுக்குத்தன்னில மாகையாலும், அபிமதஸித்தியாலும், பலம் வர்த்திக்கையாலும், தனக்குத்தன்னில மல்லாமையாலும், அபிமதாலாபத்தாலும், பலம் க்ஷயிக்கையாலும் துதிக்கை முழுத்துமபடியான தசை விளைகையாலே, இனி யிதுக்கு க்வசித்தில்லை யென்னும்படியான ஆபத்தையடைந்து, இத்தசையில் விரோதிநிரஸனசீலனான ஸர்வேச்வரனே நமக்கு ரக்ஷகனென் றநுஸந்தித்து "நாராயணாவோ" என்றோலமிட்டாப்போலே, ஸகலாபந்நிவாரணமான தேவர் திருவடிகளை) ஸ்மரித்து, ஓலமிட்டால் = ராமாநுஜா! வென்று கூப்பிட்டால், பின்பு = அநந்தரம், அவைதாம் = அப்படி பாதிக்குமவையான அவ்விந்த்ரியங்கள்தான், என்னை = அடியேனை, அடராமல் = மேலிடாமல், இரங்காய் = க்ருபைசெய்தருளீர், எதிராசா = யதிகளுக்கு நாதரானவரே! உன்னையல்லால் = தேவரையொழிய, எனக்கு = அடியேனுக்கு (ரக்ஷகர்) உண்டோ = இனிவேறுண்டோ? (ரக்ஷகாந்தரமில்லை யாகையாலே தேவரே ரக்ஷித்தருளவேணுமென்றுகருத்து) "உன்பதங்கள் தம்மை நினைந்தோலமிட்டால்" என்கிறதுக்கு, "எம்பெருமானார் திருவடிகளே சரணமென்று மநஸ்ஸாலே ஸ்மரித்து வாசகமாலேபெருமிடறு செய்து கூப்பிட்டால்" என்று பொருளாகவுமாம். (௪௨)

(க) தி-வாய்-௭-௧.

(வ்யா-ம) (க) 'கோவாய் ஐவரென் மெய்குடியேறி' இத்யாதிப்படியே, பஞ்சேந்த்ரியங்களுமாக்ரமித்து ஸ்வகிங்கரனும்படி ஸ்வஸ்வவிஷயங்களைக் காட்டி, காட்டென்று துடர்ந்து பாதிக்குந்தசையிலே கேவலக்கே ஹோஷபூகனானவடியேன் கஜேந்த்ராழ்வான மடுவின் கரையிலே, (உ) "க்ராஹக்ரஸ்தே கஜேந்த்ரே -ராது ஆகாஷ்டே ஜலே" என்று (ங) *முழுவலி முதலை நீருக்குள்ளே யிழுத்துக்கொண்டு போய நலியும்போது, (ச) "மனஸா சிந்தயத்தரிம்-மஹஸா சிந்தயத்தரிம்" என்று சிந்தித்து (ரு) "நாராயணாவோ" வென்றோலமிட்டாப்போலே, ஸகலாபந்நிவாரணமான தேவர் திருவடிகளை ஸ்மரித்து ராமாநுஜாவென்று கூப்பிட்டேன்,

அநந்தரம் அப்படி பாதகங்களானவை, அடியேனை மேலிடாமல், தயைபண்ணியருளவேணும் எதிகளுக்கு நாதரானவரே! தேவரையொழிய வெனக்கு ரக்ஷகரானவர்? இனி வேறுண்டோ? வேறு ரக்ஷகாந்தரமில்லையாகையாலே, தேவரே ரக்ஷித்தருளவேணுமென்று கருதி "உன்பதங்கள் தன்னை நினைந்தோலமிட்டால்" என்கிறதுக்கு எம்பெருமானார் திருவடிகளை சரணமென்று மனஸாலே ஸ்மரித்து, வாக்காலே பெருமிடறு செய்து கூப்பிட்டாலென்னவுமாம் (சஉ)

(அ-கை) 'இரங்காய் எதிராசா" என்று அவரை வெறுக்கிறதென்? ப்ராப்யபூமியில் ப்ராவண்யமும், த்யாஜ்யபூமியில் ஜிஹாஸையு மதிகாரிக்கவஸ்யாபேக்ஷையாயிருக்க அவையிரண்டுமில்லாத நமக்கு அஸத்ருஸமானதேசத்தை அவரப்படித்தந்தருளுவரென்று அதில் நின்றும் நிராசராகிறார்

இந்தவுலகிற்பொருந்தாமை யேதுமில்லை
அந்தவுலகிற்போக வாசையில்லை—இந்த நமக்
கெப்படியேதான் தருவ ரெந்தையெதிராசா
ரொப்பில் திருநாடுகந்து. (சங)

இந்தவுலகில் = கொடுவுலகமான இந்த த்யாஜ்யபூமியில், பொருந்தாமை = அடிக்கொதிப்பது - அருசி, ஏதுமில்லை = அத்யல்பமுமில்லை, அந்தவு

(க) தி-மொ-எ-எ-க (உ) வி-தாம-கக-சக (ங) தி-மொ-இ-அ-ங
(ச) வி-தாம-கக-சஎ (ரு) சிறிய திருமடல்.

லகில் = அந்த ப்ராப்யபூமியான பரமபதத்தில், போக = செல்ல, ஆசையில்லை = ப்ராவண்யமுமில்லை, இந்த நமக்கு = இப்படி யபேக்ஷிதங்களாயிருக்கிற விரண்டிலும் அந்வயமற்றிருக்கிற நமக்கு, எந்தை = தந்தையாகிய, எதிராசர் = எம்பெருமானார், ஒப்பு = உபமானம், இல் = இல்லாத, (வைபவத்தையுடைய) திருநாடு = பரமபதத்தை, எப்படியேதான் = எந்த ப்ரகாரமாகத்தான், உகந்து = ஸந்தோஷித்து, தருவர் = உபகரித்தருளுவர்? (௪௩)

(வ-ம்) (க) "கொடுவுலகம் காட்டேல்" என்னும்படியான இந்த த்யாஜ்யபூமியில் அடிக்கொதிப்பு அத்யல்பமுமில்லை (உ) 'வானுலகந்தெளிந்தே யென்றெய்துவது" என்னும்படியான அந்த ப்ராப்யபூமியை ப்ராபிக்கவேணுமென்கிற ப்ராவண்யமுமில்லை இப்படி யபேக்ஷிதங்களாயிருக்கிற விரண்டிலும் அந்வயமற்றிருக்கிற நமக்கு ஜநகரான வெம்பெருமானார் அஸத்ருசமான வைபவத்தை யுடைத்தான (௩) "தெளிவிசும்பு திருநாடு" என்கிற திருநாட்டை உகப்புடனே எப்படித்தானுபகரித்தருளுவர் (௪௩)

(அவதாரிகை) "இந்த வுலகில் பொருந்தாமை யேதுமில்லை யந்த வுலகில் போகவாசையில்லை" என்றலந்தித்தவர், நம்மளவிதுவாயிருந்தது இனி வெளிகொள்வனென்னென்றவர்களிடத்திலே கண் வைக்க அவர்களபடி சாலத்தண்ணிதாயிருந்தவாறே இப்படியிருப்பது இவர்கள் பாபங்களைச் செய்யும்பிரகார மென்றதுக்கு நோக்க தருளிச்செய்கிறார்

மாகாந்த நாரணனார் வைகுமவகையறிந்தோர்க்
கேகாந்தமில்லை யிருளில்லை—மோகாந்தர்
இவ்விடமேகாந்த மிருளென்று பயமற்றிருந்து
செய்வர்கட்டாம் பாவத்திறம் (௪௪)

மாகாந்த = லக்ஷ்மீகாந்தனான, நாரணனார் = நாராயணரான, வைகுமவகை = (நாராயணத்வ ப்ரயுக்த வ்யாப்தமடியாக ஸமஸ்தசேதநாசேதநங்களிலும் உள்ளும் புறம்பும்) வ்யாபித்திருக்கிற, ப்ரகாரத்தை, அறிந்தோர்க்கு = அறிந்த ஜ்ஞாதாக்களுக்கு, ஏகாந்தமில்லையிருளில்லை = தனிமையில்லை, அந்தகாரமில்லை, ச்ருதி "நாராயண பரோஜ்யோதி" என்றும், "பச்யந்தேடன் = நாரணனைக்கண்டேன்" என்றும், "அவனே" யென்னு

(க) தி௩௧-௪ க-எ (உ) தி-மொ-க௧-அ (௩) தி-வாய-கூ-எ-ஞ

மயனான ஸர்வேச்வரன் எங்கும் 'வ்யாபித்திருக்கும்ப்ரகாரத்தை நெஞ்சென்னும் உட்கண்ணாலே காணமாட்டாதே, இவ்விடம் ஒருவருமில்லாத ஏகாந்தம், இவ்விடம் தேஜஃப்ரஸாரமில்லாத இருளென்று நிர்ப்பயராயிருந்து (க) "తస్యాన్తికే త్వం వ్రజినం కరో-தஸ்யாந்திகேத்வம் வ்ருஜிநம் கரோஷி" என்கிறபடியே பாபஸமூஹங்களை அஜ்ஞானத்தாலே செய்யாநிற்பார்கள், இவர்கள்படி இதுவாவதே யென்று கருத்து. வைகல் = சொல்லலும், இருத்தலும், திறம் = ஸமூஹம் இப்பாட்டுக்கடி, எம்பெருமானாருடைய உக்த்யநுஷ்டானங்களாயிருக்கும் (௪௪)

(அ-கை) கீழ் " மாகாந்தநாரணனார் வைகுமவகை " என்று வ்யாப்தியை ப்ரஸ்தாவித்து, இப்படி ஸர்வவ்யாபகனான வவனோடு அநாதியாய் வருகிற ஸம்பந்த முண்டாயிருக்க, அத்தை அறியாதே கீழ்ச்சொன்ன மோஹாந்தரிலே யந்யதமராயிருந்த நான், ஆசார்ய ஸம்பந்தத்தாலேயன்றோ உஜ்ஜீவித்ததென்று ஸ்வலாபத்தை எப்போதும் மநுஸந்தித்துப்போருவென்று, தம்திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்

நாராயணன் திருமால் நாரம்நாமெனனுமுறை
யாராயில்நெஞ்சே யநாதியன்றோ—சீராரும்
ஆசாரியனாலேயன்றோ நாமுய்ந்ததென்று
கூசாமலெப்பொழுதுங்கூறு (௪௫)

நாராயணன் திருமால் = "திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்கிறபடியே ஸ்ரீய:பதியானவன் நாரசப்தவாச்யங்களான வஸ்துமாத்ரங்களையுடையவன் நாரம் நாம் = நித்யமான அசேதநாதிகளும், நாம், என்னும் = என்கிற, உறவு = அந்த அநாத்யமாந ஸம்பந்தம், ஆராயில் = நிரூபிக்கில், நெஞ்சே = மனமே! அநாதியன்றோ = இன்றுண்டானதன்றே? அநாதியாய் வருகிறதன்றோ? சீராரும் = அந்தஸம்பந்தத்தை யுணர்த்தின ஜ்ஞாநாதிகுண பரிபூர்ணரான, ஆசாரியனாலேயன்றோ = ஆசார்யராலே யல்லவோ? நாமுய்ந்ததென்று = நாமுஜ்ஜீவித்ததென்று, கூசாமல் = லஜ்ஜாபிமானங்களைவிட்டு, எப்பொழுதும் = ஸர்வகாலமும், கூறு = ப்ரஸித்தமாக வநுஸந்தித்துக்கொண்டிரு. (௪௫)

---

(க) பார-ஸம்ப-௭௪ ௧௧.

(அம்) (க)"திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்கிறபடியே, அவன் ஸ்ரியஃபதி நாராயணன். நாம் நாரமென்கிற இந்த வநாத்யயநஸம்பந்தம் நிரூபிக்கில், மநஸ்ஸே இன்றாகவுண்டான தன்றே! அநாதியாய் வருகிறதன்றோ? ஆயிருக்கவது நெடுங்காலம் ஸம்பந்தஜ்ஞாநமன்றிக்கே, அஸித்ப்ராயமா யிழந்தன்றோ கிடந்தது. இப்போது தத்ஸம்பந்தத்தை யுணர்த்தின ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணராயிருக்கிற வாசார்யனாலே யன்றோ நாமுஜ்ஜீவித்ததென்று, (க) "பெருமையும் நாணும் தவிர்ந்து பிதற்றுமின்" என்கிறபடியே, லஜ்ஜாபிமாநங்களைவிட்டு ஸர்வகாலமும் ப்ரவீத்தமாக வநுஸந்தித்துக்கொண்டு போரும். (உ) "இறையு முயிரும்" இத்யாதி. "ஈஶ்வராத்மநோஸ் - ஆத்மநோஹ்யதிஶஸ்ய" இத்யாதி.        (சரு)

(அ-கை) கீழ் ஆசார்யனாலே யன்றோ நாமுய்ந்த தென்கிறவிந்தை விசேஷநிஷ்டமாக்கி யருளிச்செய்கிறார்.

திருவாய்மொழிப்பிள்ளை தீவினையோந்தம்மைக்
குருவாகி வந்துய்யக்கொண்டு—பொருவில்
மதிதானளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே
எதிராசர்க் காளானோமாம்.                                                    (சசு)

திருவாய்மொழிப்பிள்ளை="தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே பூர்வரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போக்யமாக வவதரித்த திருவாய்மொழியிலே யவகாஹித்து, அதில் ப்ரபந்த ரஸம், அர்த்தரஸம், பாவரஸமென்கிற விவற்றை யநுபவித்து, தந்நிஷ்டராய, தத்வ்யதிரிக்த ஶாஸ்த்ரங்களை த்ருணவத் ப்ரதிபத்திபண்ணியிருக்கையாலே, திருவாய்மொழியோட்டை ஸம்பந்தத்தையே தமக்குநிரூபகமாக வுடையராய், ஆழ்வார் திருவடிகளிலே ஸர்வவித கைங்கர்யமே யநவரதம் செய்துகொண்டு போராநிற்கிற திருவாய்மொழிப்பிள்ளை, தீவினையோந்தம்மை=க்ரூரகர்மாக்களாமா யிருக்கிறநம்மை, குருவாகி=ஆசார்யராயவதரித்து, வந்து = நாமிருந்தவிடம் தேடிவந்து, உய்யக்கொண்டு= உஜ்ஜீவிக்கும்படி யங்கீகரித்து. பொருவில்=ஶாஸ்த்ரஜ்ஞாநாதிகள் போலன்றிக்கே - உபமாந ரஹிதமான, மதி = திருமந்த்ரத்தால் பிறக்கும் ஞான ஜ்ஞாநத்தை, தான் = தாம், அளித்தருளும் = உபகரித்தருளும், வாழ்வன்றோ=ஸம்பத்திறாலன்றோ? நெஞ்சே=மநஸ்ஸே! யாம் = நாம், எதிராசர்க்கு=எம்பெருமானார்க்கு, ஆளானோம்= அடிமையாயினோம்.(சசு)

(க) திருப்பல்லா-கக.                                                                    (உ) ஞானஸாரம்.

ராத், மாநுசர்கள் = மனிதருடைய, இருப்பிடந்தன்னில் = வஸிக்கிற ஸ்தலந்தன்னில், இப்பொழுதும் = க்ஷணகாலமும் இரா = வர்த்தியா திருக்கிற, (ஆழ்வான் போல்வாரான) மாநுசரவர்க்கு = மநுஷ்யருக்கு, எல்லாவடிமையும் = ஸர்வவித கைங்கர்யங்களையும், செய்யவெண்ணி = செய்யக்கருதி, இரா = அத்தைச் செய்யாமலிருக்கிற, மாநுசாதமரை = அறிவற்ற மநுஷ்யாதமர்களை, மாநுசராக = பசு ஸமானவர்களை மநுஷ்யராக, என்கொல் எண்ணுவது = எப்படித்தான் எண்ணுவது? (“ஜ்ஞாநேந ஹீந: பஶுபிஸ்ஸமாந:” என்னுமத்தனை. (௪௭)

(வ-ம) (௧) “நள்ளிருளளவும் பகலும் நானழைப்பன் நாராயணா வென்னும் நாமம்” என்கிறபடியே, “ராமாநுஜாய நம” என்று திவாராத்ரவிபாக (ஞு) மற வநுஸந்திக்க ப்ராப்தமாயிருக்க, அத்தைச்செய்யாதேயிருக்கிற பசு ஸமாநமநுஷ்யர்கள் வர்த்திக்கிற ஸ்தலந்தன்னில் க்ஷணகாலமும் துஸ்ஸஹமாய் வர்த்தியாதிருக்கிற ஆழ்வான் போல்வாராய், ஶாஸ்த்ரவஶ்யரான மநுஷ்யஜந்மாக்களுக்கு (௨) “எத்தொழும்பும் சொல்லால் மனத்தால் கருமத்தினால் செய்வன்” என்கிறபடியே ஸர்வவித கைங்கர்யங்களையுஞ் செய்யவெண்ணியிருக்க ப்ராப்தமாயிருக்க, அத்தைச் செய்யாதேயிருக்கிற கருத்தக மநுஷ்யாதமர்களை, (௩) “மானிடவரல்லரென்றென் மனத்தே வைத்தேன்” என்கிறபடியே, பஶுஸமானவர்களை மநுஷ்யராக வெப்படி யெண்ணுவது, (௪) “జ్ఞానేనహీనాః పశుభిస్సమానాః-ஜ்ஞாநேநஹீநா: பஶுபிஸ்ஸமாநா:” என்னுமத்தனை

(அ-கை) கீழெல்லாவடிமையுஞ் செய்யவெண்ணி, இராமாநுசாய என்கிற ப்ரஸங்கத்திலே தம்முடைய வாக்காதிகரணங்களை இப்படியே யவர்கள் விஷயத்திலே அநந்யார்ஹமாம்படி பெரியபெருமாள் பண்ணியருளினபடியை ப்ரீதியாலே பேசியருளுகிறார்

எண்ணுதென்னெஞ்ச மிசையாதென்னா விலறைஞ்சாதுசென்னி
கண்ணுளவை யொன்றுங்காணலுறா கலியாநவிய
வொண்ணுதலன்னை முலைகனிதோ னெதிராசனடி
நண்ணுதவரை யரங்கேசர் செய்தநலம் நமக்கே (௪௮)

---

(௧) தி-மொ-௧-௧-௫ (௨) இரா-நூ-௮௦
(௩) தி-மொ-௧௧-௭-௯ (௪)

பக்கலைப் பண்ணமாட்டாது. (இறைஞ்சாதுசென்னி) (௧) "ப்ரணாமம் மூர்த்நா-ப்ரணமாமி மூர்த்நா" என்னும் மநுவுடைய சென்னியிறே (கண்ணாவையொன்றுங்காணாவாறு) (௨) "கண்கருதிக்காண" (௩) 'ஸ்ரீமத்வாஸ்ஸுதி-ஸ்ரீமாதவாங்க்ரி' என்னும்படியான திருவடிகளைக் கீழ்த்தலைக்கும் ஸ்பர்சிக்க வாசைப்படாது. (௪) "காணலுறுகின்றேன்" என்கிறவிடத்துக்கு, காணவாசைப்படுகின்றேனென்றிறே யருளிச்செய்தது கலியனென்கிறது (௫) "ஏழை கலியன்" என்றபடியே ப்ராப்தத்திலுறைப்பைப் பற்றவாய்த்து (௪௮)

(அ-கை) "எதிராசனடி நண்ணுதலை யெண்ணுது" இத்யாதியாலே, தமக்கு ஸம்ஸாரிகளிடத்திலுண்டான வைமுக்யத்தைத் தர்சிப்பித்து, மீள அவர்கள் நாசத்தைக் கண்டு ஆற்றமாட்டாதே, அவர்களுக்கு மோக்ஷோபாயமாக எம்பெருமானாருடைய வாச்ரயணத்தை விதிக்கிறார்.

நந்தா நரகத்தழுந்தாமை வேண்டிடில் நானிலத்தீர்
எந்தாதையான எதிராசனை நண்ணுமென்றுமவன்
அந்தாதிதன்னை யநுசந்தியுமவன் தொண்டருடன்
சிந்தாகுலங்கெடச் சேர்ந்திரும் முத்திபின் சித்திக்குமே (௪௯)

நந்தா = ஒருகாலும் அநுபவித்து முடியாத, நரகத்து = ஸம்ஸாரமாகிற நரகத்திலே, அழுந்தாமை = மக்நராகாமை, வேண்டிடில் = அபேக்ஷிதமாகில், நானிலத்தீர் = நாலுவகைப்பட்ட பூமியிலுண்டானவர்களே! எந்த = அடியேனுக்கு, தாதையான = பிதாவான, எதிராசனை = எம்பெருமானாரை, நண்ணும் = ஆச்ரயியுங்கோள், என்றும் = ஸர்வகாலத்திலும், அவன் அந்தாதிதன்னை = மோக்ஷஹேதுவாயிருக்கிறவவருடைய திருநாமத்தைப் பாட்டுகடோறும் ப்ரதிபாதிப்பதாய் அதற்குமேல் ப்ரபந்நகாயத்ரியாயிருக்கிற வைலக்ஷண்யமான நூற்றந்தாதிதன்னை, அநுசந்தியும் = அநுஸந்தியுங்கோள், அவன் தொண்டருடன் = அவர் திருவடிகளிலே சபலராய்த் தொண்டுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடன், சிந்தாகுலம் = இதர ஸஹவாஸத்தாலுண்டான மநோதுக்கமெல்லாம், கெட = நசிக்கும்படி, சேர்ந்திரும் = ஒருநீராகப் பொருந்தியிருங்கோள், பின் = அனந்தரம், முத்தி = மோக்ஷானந்தம், சித்திக்கும் = ஸம்யக்காக ஸித்திக்கும் (௪௯)

---

(௧) யதிராஜவிம்சதி (௨) இரா-நூ- (௩) யதிராஜவிம்சதி-௧
(௪) ௪ திருவ-௩௪ (௫) தி-மொ-௧-௪-௮

பரமேவ்யோமந்" என்று சொல்லுகிற ப்ரக்ருதி பரவிருத்தியை யுடைத்தாயிருப்பதான அந்த பரமபதத்திலே, உங்களை = நித்யஸம்ஸாரிகளான உங்களை, வைக்கும் = நித்யரோடே யொருகோவை யாக்கிவைப்பர், நீர் = நீங்கள், எதிராசரென்று = எதிராசாவென்று, சிந்தியும் = மனஸ்ஸிலே சிந்தியுங்கோள் (யத்நம் அல்பமாட, பலம் அதிகமாயிருக்கும்) (௩௦)

(வ-ம) திருநாமாநுஸந்திக்கைக்கு யோக்யமாயிருப்பதான ஸர்வகாலத்தை வ்யர்த்தமே போக்கி, அஜ்ஞாநத்தாலே ஸம்ஸாரத்திலே பரிப்ரமிக்கிற பாபிஷ்டர்களாயுள்ளவர்களே! ஸர்வகாலத்திலும் ஒருபடிப்பட நின்று தபஸ்ஸிலே உத்ஸாஹிக்குமவர்களாயிருக்குமவர்களுக்கும் ப்ராபிக்கப்போகாமலிருப்பதாய், (க) "தத்விஷ்ணோ: பரமம் பதம்"-"தமஸ: பரமேவ்யோமந்" என்று சொல்லுகிற ப்ரக்ருதிபரவிருத்தியையுடைத்தா யிருப்பதான வந்தப்பரமபதத்திலே, நித்ய ஸம்ஸாரிகளான வுங்களை யேற்றி நித்யரோடே ஒருகோவையாக்கிவைக்கும் அதுக்குடலாக கீழ்ச்சொன்னவைகளானவ்யோத்தி யென்னலாம்படி அதிலு மெளிதாயிருப்பதான வெம்பெருமானார் திருநாமத்தை, எதிராசரென்று நீங்கள் மனஸ்ஸிலே சிந்தியுங்கோள் யோத்யமல்பமாய், பலமதிகமாயிருக்கும் யோத்தி = யத்நம் (௩௦)

(அ-கை) இனி ஸம்ஸாரிகளிழவைத்தான் சொல்லவேணுமோ? உம்முடைய நிலை இருந்தபடியென்னென்று எம்பெருமானார்க்கு நினைவாக, அவர்களோ பாதி அநாதிகாலமெல்லாம் வ்யர்த்தமேபோயிருக்க, அதனிழவின்றிக்கே யிருக்கிறவெனக்கு தேவருடைய க்ருபை யுண்டானபின்பு, தத்லாபக்லேஶமுண்டாயத்தென்று ஸவிலாபத்தைப்பேசியருளுகிறார் இழவு = அலாபக்லேஶம்

என்றுளனீச னுயிருமன்றேயுண் டக்காலமெல்லாம்
அன்றளவாகப் பழுதே கழிந்த திருவினையால்
என்றிழவின்றி யிருக்கு மென்னெஞ்சமிரவுபகல்
நின்று தவிக்கு மெதிராசா நீபருவஞ்செய்கினே. (௩௧)

என்றுள்ள னீசன் = ("நானுன்னை யன்றி யிலேன் கண்டாய் நாரணனே நீ யென்னை யன்றி யிலை" என்கிறபடியே, ஒழிக்கவொழியாத அவினா

(க) லை-௭௱௱

பாவஸம்பந்தம் நித்யமாக வுண்டாகையாலே) நியந்தாவான ஈச்வரன் எப்படி எப்போதும் ரக்ஷித்தனுமிருக்கிறானோ? (அப்படியே) உயிரும் = ஆச்ரிதவ்யனானவாத்மாவும், அன்றேயுண்டு = அப்போதே உண்டாயிருக்கிறான், இக்காலமெல்லாம் = இவ்வநாதிகாலந்தொடங்கி, இன்றளவாக = இப்போதளவாக, இருவினையால் = புண்யபாபரூபமான ப்ரபலகர்மத்தாலே, பழுதே கழிந்ததென்று = வ்யர்த்தமாகவே போயிற்றென்று, இழவின்றியிருக்கும் = இப்படி இழந்ததுக்கு அநுதபியாமலிருக்கிற, என்னெஞ்சம் = அடியேனுடைய மநஸ்ஸு, எதிராசா = எம்பெருமானாரே! நீயருள்செய்த பின்னே = தேவர் விசேஷகடாக்ஷம் பண்ணியருளின பின்பு, இரவுபகல் = அல்லும் பகலும், இன்று = இதிலே யொருப்பட்டு இன்று, தவிக்கும் = பரிதபியாநிற்கும் (௫௧)

(வ-ம்) (க) "நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே நீ என்னையன்றியிலை" என்கிறபடியே, ஒழிக்கவொழியாத ரக்ஷகபாவஸம்பந்தம் நித்யமாகவுண்டாகையாலே, நியந்தாவான ஈச்வரன், என்றுதொடங்கி ரக்ஷித்தனுமிருக்கும் அப்படியே, ஆச்ரிதவ்யனானவாத்மாவும் அப்ருதக்ஸித்தவிசேஷணமாகையால், அன்றே யுண்டாயிருக்கும் இப்படி யன்றுதொடங்கி தேவர் விஷயீகாரம் பெற்ற வின்றளவாக வுண்டானவென்னுடைய ப்ரபலகர்மத்தாலே சேஷசேஷிஸம்பந்தஜ்ஞாநகார்யமான கைங்கர்யத்துக்கு அடைத்த விந்த அநாதிகாலமெல்லாம் வ்யர்த்தமே போயிற்றென்று இழந்ததனைக்கு அநுதபியாமலிருக்கிற வென்னுடைய மநஸ்ஸு, தேவர் விசேஷகடாக்ஷம் பண்ணியருளின பின்பு, திவாராத்ரவிபாக (ஞ·X) மற விதிலே யொருப்பட்டு இன்று பரிதபியாநிற்கும் இதென்ன ஸ்வபாவம் ஓரு கர்ப்பாப்ராப்ய மிருந்தபடியே! இருவினை = புண்யபாபங்களாகவுமாம் (௫௧)

(அ-கை) அநுதாபாதிகளுண்டாகவே, எம்பெருமானாருக்காக, பெரியபெருமாள், "श्रीमान् समारूढ पतङ्गराजः- ஸ்ரீமாந் ஸமாரூடபதங்கராஜ:" என்கிறபடியே எழுந்தருளி யபிமானித்தருளும் பேற்றின கௌரவத்தை அநுஸந்தித்தருளுகிறார்

கனககிரிமேல் கரிய முகில்போல்
வினைத்திறவன் மேற்கொண்டு — கனவிடும்போது

(*) ச-திருவ-எ

ஏராரெதிராசராக வென்பால்
வாரா முன்னிற்பர் மகிழ்ந்து (ருஉ)

கனககிரிமேல் = ஸ்வர்ணமயமான மஹாமேரு மலையின்மேலே, கரிய முகில்போல் = (படிந்திருக்கிற) நீலமேகம்போலே, வினதை = வினதை யென்னும் ஸ்த்ரீயினுடைய, சிறுவன் = புத்ரனான வைநதேயனை-பெரிய திருவடியை, மேற்கொண்டு = வாஹநமாகக்கொண்டு (கருடவாஹனாரூட ராய்) தனுவிடும்போது = சரீரம் விடுகிற ஸமயத்தில், (தாய் முகங்காட்டு மாபோலே) ஏர் = ஸௌந்தர்யாதிகளால், ஆர் = பூர்ணரான, ஆரங்கர் = பெரியபெருமாள், எதிராசராக = எம்பெருமானாருக்காக, என்பால் வாரா = அடியேனிருந்த விடத்தே வந்து மகிழ்ந்து = ஹர்ஷயுக்தராய், முன் னிற்பர் = முன்னே நிற்பர் இத்தாலெனக் கபேக்ஷிதமான * முகமும் முறுவலும் காட்டி யநுபவிப்பித்தருளுவர், இது நிஸ்சயமென்று கருத்து (ருஉ)

(வ ம) (க) "[illegible]—காருண்ய நிக்ரேஹாநுக்ரஹே லக்ஷிதகதோ யதீந்த்ர:" என்றும், (உ) "மஞ்சுயர் பொன்மலைமேலெழுந்த மாமுகில்போன்றுளர்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஸ்வர்ணமயமான மஹா மேருவின்மேலே (ங) "பெரும்பவ்வமண்டியுண்ட பெருவயிற்றகருமுகிலானது இனி யப்படிந்திருக்குமாபோலே, பரபாகரஸாவஹமாம்படி, விநதை சிறுவனென்னும்படியான பெரியதிருவடிமேல்கொண்டு தேஹபாத ஸமயத்திலே தாய் முகங்காட்டுமாபோலே, ஸௌந்தர்யாதிகளால் பூர்ணரான பெரியபெருமாள் எம்பெருமானாருக்காக நானிருந்தவிடத்தே வந்து ஹர்ஷயுக்தராய் முன்னிற்பர் இத்தாலெனக்கபேக்ஷிதமான முகமும் முறுவலும் காட்டியநுபவிப்பித்தருளுவர் இது நிஸ்சயமென்று கருத்து (ருஉ)

(அ-கை) இப்படிப்பெரியபெருமாள் பெரியதிருவடிமேல் கொண்டுவந்து திருமுகப்பரதாகம் பண்ணும்படியை யநுஸந்தித்து அதுக்கிடைச்சுவராய் பாபாஸ்பதத்தேஹத்துடனே துஸ்ஸஹமான துக்கங்களை யநுபவித்திருக்க முடியாது ஆகையாலே, ஹிதபரவாதக்கரான தேவர் ஸகலதுக்காஸ்பதமான ஸம்ஸாரத்தில் நின்றும் அடியேனைச் சீக்கிரமாக உத்தரிப்பித்தருளவேணுமென்கிறார்

---

(க)   (உ) தி-மொ க உ-அ
(ங) திருநெ-உச

இத்தாலே தென்னரங்கர் செய்கின்றதென்றறிந்தே
இருந்தாலு மக்கால வேதனையின் கனத்தால்
பதைத்தாவோ வென்னு மிந்தப் பாவுடம்புடனே
பலநோவுமநுபவித்து இப்பவத்திருக்கப்போமோ
மத்தாலே வல்வினையின் வழியுழன்று திரிந்த
வல்வினையேன் றன்னை யுனக்காளாக்கிக்கொண்ட
இத்தாயும் தந்தையுமா மெதிராசா வென்னை
இனிக்கடுக இப்பவத்தினின்று மெடுத்தருளே (௫௩)

இத்தாலே = ஹிதபுத்தியாலே, தென்னரங்கர் = பெரியபெருமாள் செய்கின்றதென்றறிந்தே யிருந்தாலும் = க்ருபாபலமாக துக்கங்களை யநுபவிப்பிக்கிறாரென்றறிந்தே யிருந்தாலும், அக்காலவேதனையின் கனத்தால் = அந்தந்த காலத்திலுண்டான வேதனையின் மிகுதியாலே, பதைத்து = துடித்து, ஆவோவென்னும் = அந்த துஸ்ஸஹதையாலுண்டான விஷாதத்தாலே துக்கஸூசகமான ஹா! ஹா! என்கிற சப்தங்களைச்செய்யாநின்று, இந்த பாவுடம்புடனே = இந்தப்பாபசரீரத்தோடே, பலநோவுமநுபவித்து = வெகுதுக்கங்களையும் அநுபவித்து, இப்பவத்து = இந்தஸம்ஸாரத்தில், இருக்கப்போமோ = இருக்க ஸஹ்யமோ? மத்தாலே = தேஹமத்தினாலே, வல்வினையின் வழியுழன்று திரிந்த = பாபகாமத்தின மார்க்கத்திலே அதுவே யாத்ரையாய வர்த்தித்த, வல்வினையேன் தன்னை = மஹாபாபியான வடியேனை, உனக்கு = ஸத்துக்களுக்கு காஸ்ரயணீயரா யிருக்கிற தேவர்க்கு, ஆளாக்கிக்கொண்ட = அடிமையாக்கிக் கொண்டருளின, இத்தாயும் = ஹிதத்தைநடத்தும் மாதாவும், தந்தையுமாம் = பிதாவுமாயிருக்கிற, எதிராசா = எம்பெருமானாரே! இனி = தேவர்ஸம்பந்தத்தை யறிந்தபின்பு, என்னை = அடியேனை, கடுக = சீக்ரமாக, இப்பவத்தினின்றும் = இந்த ஸம்ஸாரத்திலினின்றும், எடுத்தருள் = எடுத்துக்கரையேற்றி யருளவேணும், (அவர்ஜநீய ஸம்பந்தமடியாக விசேஷத்தரிப்பித்தருளுவரென்று கருத்து) (௫௩)

(வ்-ம) (௧) "ஆரப்பெருந்துயரே செய்திடினும்" இத்யாதிப்படியே ஹிதபுத்யா பெரியபெருமாள் க்ருபாபலமாக துக்கங்களை யநுபவிப்பிக்கிறாரென்றறிந்தே யிருந்தாலும் அந்தவந்தகாலத்திலுண்டான வேதனையின் மிகுதியாலே துடித்து அந்ததுஸ்ஸஹதையாலுண்டான விஷாதத்தாலே துக்கஸூசகமான ஶப்தங்களைச்சொ

(௧) ஜ்ஞாநஸாரம்.

யதிகளுக்கு நாதரான எம்பெருமானாரே! (தேவருக்கு ஆட்பட்டபின்பும்) இன்னம் = இன்னமும், எத்தனைநாள் = எத்தனைகாலம், இவ்வுடம்புடனேயிருந்து = இந்தத்தேஹத்திலே யிருந்து, நோவுபடக்கடவேன் = வேதனைபடக்கடவேன் ஐயோ = அந்தோ! என்னை=அடியேனை, இதினின்றும் = பந்தகமான விந்தத்தேஹத்தில் நின்றும், விடுவித்து = முக்தனும்படிபண்ணி, நீர்=தேவர், என்றுதான் = எப்போது தான், திருநாட்டினுள் = பரமபதத்தில், ஏற்றுவீர் = ஏற்றியருளுவதீர், (இதையருளிச்செய்யவேணும்) (௧௪)

(வ-ம) (க) "அன்னையாய்த்தனு யென்னை யாண்டிடும் தன்மையான"-என்கிறபடியே, ப்ரியஹிதங்களைப்பண்ணுகிற மாதாபிதாக்களும், மற்றுமுண்டானமோக்ஷபந்துக்களுமெல்லாமாய் என்னை ரக்ஷித்தருளுகிற நாதனே (உ) "என்மனமேக மெண்ணு மிராப்பகலின்றியே" என்கிறபடியே, என்னுடையஹிதத்தை திவாராத்ரவிபாக(ஞு)மற வொருபடிசிந்திக்கிற பரமோதாரராய், யதிகளுக்கு நாதரானவரே! (ங) 'உனக்காட்பட்டு மடியே னின்னு முழலவேணோ'' என்கிறபடியே தேவருக்கு சேஷபூதனானபின்பு இன்ன மெத்தனை கால மிந்தத்தேஹத்திலே யிருந்து வேதனைபடக்கடவேன்? ஐயோ! அடியேனை பந்தகமான விந்தத்தேஹத்தில் நின்றும் முக்தனும்படி பண்ணி, என்றுதான் திருநாட்டினுள் ளேற்றியருளுவதீர்? அந்நாளுமொருநாளாமோ? வள்ளல்=ப்ரத்யுபகார ரஹிதமாக வுபகரிக்கு முதாரர் (௧௪)

(அ-கை) செய்தவம்ஸத்தில் க்ருதஜ்ஞதையும் செய்யவேண்டு மம்ஸத்தில் அபேக்ஷையு மதிகாரிக்கு வேண்டுமென்கொண்டுகையாலே, அந்த க்ருதஜ்ஞதாவிசேஷமாக எம்பெருமானாருடைய ப்ரஸாதத்தாலே தாம் பெற்றபேறுகளை அநுஸந்தித்து வித்த (ஞ்) ராயருளுகிறார்

தென்னரங்கர் சீருக்கிலக்காகப்பெற்றோம்
திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப்பெற்றோம்
மன்னியசீர்மாறன்கலை யுணவாகப்பெற்றோம்
மதுரகவிசொற்படியே நிலையாகப்பெற்றோம்

---

(க) கண்ணி-௪  (உ) தி-வாய்-௬-௩-௭  (ங) தி-வாய் ௫-௧-௧௦

முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதுநமக்கவை பொழுதே போக்காகப்பெற்றோம்
பின்னையொன்று தனில் நெஞ்சுபேராமற்பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும்பெற்றோமே

தென்னரங்கர் = தர்சநீயமான கோயிலிலே "அருள்கொடுத்திட்டடியவரையாட்கொள்வான்" அன்பொடு தென்திசை இலங்கைநோக்கிப் பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாளுடைய, சீருக்கு = நிர்ஹேதுக க்ருபைக்கு, இலக்காகப்பெற்றோம் = லக்ஷ்யமாகப்பெற்றோம், திருவரங்கம் திருப்பதியே = 'தென்னாடும் வடநாடுந்தொழநின்ற திருவரங்கம் திருப்பதி" என்றும் "ஆராமஞ்சூழ்ந்த வரங்கம்" என்றும் "தலையரங்கம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, அகிலதிவ்யதேச ப்ரதானமான திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப்பெற்றோம் = நித்யவாஸஸ்தானமாகப் பெற்றோம், மன்னிய சீர் = பரபக்த்யாதி கல்யாணகுணங்கள் பொருந்தியிருக்கிற, மாறன் = நம்மாழ்வாருடைய, கலை = தொண்டர்க்கமுதான வகுளபூஷண வாக் அமுதத்தை, உணவாகப்பெற்றோம் = அஶநமாக புஜிக்கப்பெற்றோம், மதுரகவி = 'தேவுமற்றறியேன்" என்றருளிச்செய்த மதுரகவியாழ்வாருடைய, சொற்படியே = திவ்யஸூக்திப்படியே, நிலையாகப்பெற்றோம் = 'யதீந்த்ரமேவ நிரந்தரம் விஷேவே தைவதம்பரம்' என்றும், 'உன்னையொழியவொருதெய்வமற்றறியா மன்னுபுகழ்சேர் வடுகநம்பி தன்னிலையை' என்றும், நாமும் நம்முடையாரும் பேசும்படியான சரமபாவ நிஷ்டையே நிஷ்டையாகப்பெற்றோம், முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் = தத்ப்ரதிபாதகங்களான நம்முடைய பூர்வாசார்யர்களுடைய திவ்ய ஸூக்திகளான ரஹஸ்யங்களை ஆதரமாக அநுஸந்திக்கப் பெற்றோம், முழுதும் நமக்கவைபொழுதே போக்காகப்பெற்றோம் = அதில் ஆதராதிசயத்தையுடைய நமக்கு மற்றொன்றில் பொழுதுபோக்காமல் முழுதும் அவற்றையே காலக்ஷேபமாகப் பெற்றோம், பின்னை = இப்படியான வந்தரம், ஒன்றுதனில் = ததிதர க்ரந்தங்களிலொன்றிலும், நெஞ்சுபேராமல் பெற்றோம் = மநஸ்ஸு சலியாமல் இதிலே ப்ரதிஷ்டிதமாம்படி யிருக்கப்பெற்றோம், பிறர்மினுக்கம் பொறாமையில்லா = இதெல்லாமொருதட்டும் தானொரு தட்டுமாயிருக்குமதாய், "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்துவந்திருக்கையும்" என்னும்படி அரிதாயிருப்பதான பரோச்ராயங்கண்டால் அஸஹிஷ்ணுதையில்லாத, பெருமையும் பெற்றோமே = மஹத்தையும் லபித்தோமே? இதொரு மஹாலாபமிருந்தபடியே! என்று வியந்தருளுகிறார் (உள்ளுகை = விசாரிக்கை). (௫௫)

(வ-ம) தாஸ்யமான கோயிலிலே (௧)* அருள்கொடுத்திட்டடிய வரையாட்கொள்வாராய் (௨)* அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொண்டருளும் பெரியபெருமாளுடைய நிர்ஹேதுக க்ருபைக்கு லக்ஷ்யமாகப் பெற்றோம், (௩) "தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கத்திருப்பதி" என்றும், (௪) "ஆராமஞ் சூழ்ந்தவரங்கம்" என்றும், (௫) "தலையரங்கம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, அகிலதிவ்யதேசப்ரதானமான திருவரங்கத்திருப்பதியே, நித்யமாக வாஸஸ்தானமாகப் பெற்றோம், பரப்பத்யாதிகல்யாணகுணங்கள் பொருந்தியிருக்கிற வாழ்வாருடைய தொண்டக்குழாமான வருள் பூஷணவாக்ம்ருதத்தை அம்சமாகப் புஜிக்கப்பெற்றோம்

(௬) "தேவுமற்றறியேன்" என்கையாலே, அவர்களைச் சிரித்திருப்பாரென்னும்படியான மதுரகவிகளுடைய திவ்யஸூக்திப்படியே '[illegible] பரம்-யதீந்த்ரமேவ நிரந்தரம் நிஷேவே தைவதம்பரம்" (௭) 'உன்னையொழிய ஒருதெய்வம் மற்றறியா மன்னுபுகழ்ச்சேர் வடுகநம்பி தன்னிலைமை" என்றும், நாமும் நம்முடையாரும் பேசும்படியான சரமபர்வநிஷ்டையே நிஷ்டையாகப் பெற்றோம் தத்ப்ரதிபாதகங்களான நம்முடைய பூர்வாசார்யர்களுடைய திவ்யஸூக்திகளான ரத்னங்களை (௮) "நெஞ்சத்தனல தேறுமாம்" என்னும்படி மேலெழவன்றிக்கே ஆந்தரமாக வந்து ஸந்திக்கப் பெற்றோம், அதிலாதராதிசயத்தையுடைய நமக்கு மற்றொன்றில் பொழுதுபோக்காமல் முழுதும் அவற்றையே காலக்ஷேபமாகப்பெற்றோம் இப்படியான ஸங்கரம தந்த்ராந்தரங்களி லொன்றிலும் மநஸ்ஸு சலியாமல் இதிலே ப்ரதிஷ்டிதமாம்படியிருக்கப் பெற்றோம் இதெல்லாமொருதட்டும், தாமொருதட்டுமாயிருக்குமதாய், (௯) "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்தங்கிருக்கையும்" என்னும்படி அரிதாயிருப்பதான பரோத்கர்ஷங்கண்டால் அஸஹிஷ்ணுதையில்லாத மஹத்தையும் லபித்தோமே? இதொருமஹாலாபம் இருந்தபடியே!, உள்ளுதல்=விசாரித்தல் (௩௫)

---

(௧) பெரி-தி-௫-௯-௯ (௨) பெரு-தி-௯-௧௦ (௩) பெரி-தி ௫-௯-௧௧
(௪) சிறியதிரு-௭ (௫) உ-திருவ-௭௦ (௬) கண்ணி ௨
(௭) ௧௧ (௮) உபதேச. (௯) முமுக்ஷுப்படி-௨.

(அ-நை) "மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்" என்று தம்முடைய நிலையை வெளியிடாநின்றுகொண்டு அநுக்கரு ரூபமாக வவர் திருவடிகளில் கைங்கர்யத்தை யபேக்ஷிக்கிறார்.

உன்றனபிமானமே யுத்தாரக மென்று
சிந்தைதெளிந்திருக்கச் செய்த நீ—அந்தோ
எதிராசா நோய்களாலென்னை நலக்காமல்
சதிராக நின்திருத்தாள் தா. (நிகூ)

எதிராசா = யதிகளுக்கு நாதரானவரே ! உன்றன் அபிமானமே உத்தாரகமென்று = ("ஆசார்யாபிமானமே யுத்தாரகம்" என்கிறபடியே) தேவருடைய அபிமானமே யிவ்வாத்மாவுக் குத்தாரகமென்று, சிந்தை தெளிந்திருக்கச்செய்தநீ = "தெளிவுற்ற சிந்தையர்" என்கிறபடியே, மநஸ்ஸு நிர்மலமாய் தந்நிஷ்டனாயிருக்கும்படி பண்ணியிருக்கும்படி உபகரித்தருளின தேவர், அந்தோ = ஐயோ! நோய்களால் = வேதனைகளால், என்னை = அடியேனை, நலக்காமல் = பாதியாமல், சதிராக = ஸாமர்த்தியமாக, நின திருத்தாள = தேவா திருவடிகளை, தா = ப்ரஸாதித் தருளவேணும். (நிகூ)

(வ்-ம்) எதிகளுக்கு நாதரானவரே! "ஆசார்யாபிமானமே யுத்தாரகம்" என்கிறபடியே, தேவருடைய அபிமானமே இவ்வாத்மாவுக்குத்தாரகமென்று (க) "தெளிவுற்ற சிந்தையர்" என்கிறபடியே, மநঃப்ரஸாதமுண்டாய், தந்நிஷ்டராயிருக்கும்படிபண்ணி உபகரித்தருளினதேவர், அய்யோ! வேதனைகளாலடியேனை நலக்கேடுபண்ணாமல் (உ) "సుక్ష్మేవమాం ప్రకృతిం స్థూలసూక్ష్మరూపాం విసృజ్య-సం..." ஸூக்ஷ்மாம் ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய" என்கிறபடியே. ஸாமர்த்த்யமாக (ந) "உன்பதயுகமா மோர்கொண்டலீ" என்கிறபடியேதேவர் திருவடிகளை ப்ரஸாதித்தருளவேணும். சதிர் — விரகு. (நிகூ)

(அ-நை) இப்படி நீர்சொல்லுகிற நிர்ப்பந்தமெல்லாங்கேட்டு, நாம் உம் கார்யம்செய்கைக்கு எந்த ஸம்பந்தப்ராபல்யங்கொண்டு தொடருகிறீரென்ன, பிள்ளை திருவடிகளையாஶ்ரயித்த ராஜகுலமாஹாத்ம்யத்தாலே யொருவஸ்து வென்றபிமானித்து, அடியேனுடைய

க) தி-வாய்-எ-ரு-சக. (உ) ஶரணாகதிகத்யம். (ந) இரா-நூ-
11 1125

அபராதம் பாராததேவர் (௧) "யதீஶ்வர ஶ்ருணு ஶ்ரீமந் க்ருபயா பரயா தவ" யதிஶ்வர ஶ்ருணு ஶ்ரீமந் க்ருபயா பரயா தவ " என்கிறபடியே, அடியேனுடைய முக்த (௨) ஜல்பிதத்தைச் செவிதாழ்த்துக் கேட்டருளவேணுமென்கிறார்.

தேசிகர்கள்போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை
வாசமலர்த்தாளடைந்த வத்துவென்று—நேசத்தால்
என் பிழைகள்காணு வெதிராசரே யடியேன்
புன்பகர்வைக் கேளும் பொறுத்து. (௫௭)

தேசிகர்கள் போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை = தேசிககுல கூடஸ்தரான ஆழ்வாருடைய அசேஷ வ்ருத்தியிலும் அவிதராய், அதுவேயாத்ரையாய்ச் செய்துகொண்டு போருகையாலே, "செந்தமிழ்வேதத் திருமலையாழ்வார்வாழி" என்று, ஆசார்யர்களாலே மங்களாசாஸநம பண்ணும்படியான மாஹாத்ம்யத்தை யுடையரான பிள்ளையுடைய, வாசமலர்த தாளடைந்த = ஸௌகந்த்ய ஸௌகுமார்ய யுக்தமான திருவடிகளை யாஶ்ரயித்த, வத்துவென்று = சேஷத்வாஶ்ரயமான வஸ்துவென்கிற, நேசத்தால் = ஸ்நேஹத்தாலே, என்பிழைகள்காணு = அடியேனுடைய அபராதங்களை தர்ஶியாதே, (அதில் அவிஜ்ஞாதாவா யிருக்கிற) எதிராசரே = எம்பெருமானாரே! அடியேன் = அடியேனுடைய, புன்பகர்வை = அல்பவார்த்தைகளை, பொறுத்து = சீறுமல் ஸஹித்து, கேளும் = ஸாதரமாகத் திருச்செவிசாத்தியருளவேணும. (௫௭)

(வ்-ம்) தேசிககுலகூடஸ்தரான வாழ்வாருடைய வஶேஷவ்ருத்தியிலு மந்விதராய், அதுவேயாத்ரையாய்ச் செய்துகொண்டுபோருகையாலே, "செந்தமிழ்வேதத் திருமலையாழ்வார்வாழி" என்று ஆசார்யர்களாலே மங்களாஶாஸநம் பண்ணும்படியான மாஹாத்ம்யத்தையுடையரானபிள்ளையுடைய ஸௌகந்த்ய ஸௌகுமார்யயுக்தமான திருவடிகளை யாஶ்ரயித்து ஶேஷத்வாஶ்ரயமான வஸ்துவென்கிற ஸ்நேஹத்தாலே அடியேனுடைய வபராதங்களை தர்ஶியாதே, அதில் அவிஜ்ஞாதாவாயிருக்கிற தேவர் அடியேனுடைய தோஷயுக்தமான முக்த(௨)ஜல்பிதத்தைச் சீறுமல் ஸஹித்து நின்று ஸாதரமாகத் திருச்செவிசாத்தியருளவேணும். (௫௭)

(அ-கை) "திருவாய்மொழிப்பிள்ளை வாசமலர்த் தாளடைந்து வந்து" என்கிறமாத்ரமேயோ? அவராலே லப்தஜ்ஞாநனான எனக்கு த்வத்ஸம்பந்தஜ்ஞாந மில்லையோ வென்கிறார்.

எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால்
உன்றனுறவை யுணர்த்தியபின்—இந்தவுயிர்க்
கெல்லாவுறவும் நீயென்றே யெதிராசா
நில்லாததுண்டோ வென்னெஞ்சு. (௫௮)

எந்தை — "திருமந்த்ரம் மாதாவும், பிதாவாசார்யனு மென்றருளிச் செய்வர்கள்" என்கிறபடியே, எனக்குப்பிதாவான. திருவாய்மொழிப்பிள்ளை = திருவாய்மொழிப்பிள்ளை தம்முடைய, இன்னருளால் = நிர்ஹேதுக க்ருபையாலே, உன்றனுறவை = தேவர் திருவடிகளில் ஸர்வவித பந்துத்வத்தையும், உணர்த்தியபின் = அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணி ரக்ஷித்தருளின வநந்தரம், இந்தவுயிர்க்கு = இப்படியுண்டான ஸம்பந்தத்தையறிந்த விந்த வாத்மாவுக்கு, எல்லாவுறவும் = மந்த்ர ப்ரதிபாத்யமான நவவிதஸம்பந்தமும், நீயென்றே = தேவரென்றே, (அத்யவஸித்து) எதிராசா = எம்பெருமானாரே! என்னெஞ்சு = அடியேனுடைய மநஸ்ஸு, நில்லாததுண்டோ? = நிலைநில்லாதே யிருக்குமதுண்டோ? "தந்தை நற்றாய் தாரந் தனயர் பெருஞ்செல்வ மென்றனக்கு நீயே" என்றும், "அல்லாதசுற்றமுமாகி" என்றுமன்றோ விருப்பது? (௫௮)

(வ்-ம்) "திருமந்த்ரம் மாதாவும், பிதா ஆசார்யனுமென்றருளிச் செய்வர்கள்" என்கிறபடியே எனக்கு ஜநகரான திருவாய்மொழிப் பிள்ளை தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே, தேவர் திருவடிகளில் ஸர்வவிதபந்துத்வத்தையும் அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ணி ரக்ஷித்தருளின வநந்தரம் இப்படி யுண்டானஸம்பந்தத்தை யறிந்த விந்த வாத்மாவுக்கு மந்த்ரப்ரதிபாத்யமான நவவிதஸம்பந்தமும் தேவரென்று அத்யவஸித்து அதில் நிலைநில்லாதே இருக்குமதுண்டோ என்னுடைய மநஸ்ஸு; "தந்தை நற்றாய் தாரந் தனயர் பெருஞ் செல்வமென்றனக்கு நீயே" என்றும், "அல்லாச்சுற்றமுமாகி" என்றுமன்றோ விருப்பது. (௫௮)

(அ-கை) இப்படி தேவர் திருவடிகளில் ஸம்பந்தஜ்ஞாநத்தை யுடைய எனக்கு ஹிதபரரான பெரியபெருமாள் பெரியதிருவடியை மேற்கொண்டுவந்து முகங்காபூர்ணமுண்டாக்கித் தாமே மார்க்கச்சிந்தை பண்ணி தேஹவிமோசநம் பண்ணுங்காலாவதியை யருளிச்செய்ய வேணுமென்கிறார்

எந்தைத்திருவரங்கர் ஏரார்கருடன்மேல்
வந்து முகங்காட்டி வழிநடத்த—சிந்தைசெய்து இப்
பொல்லாவுடம்புதன்னைப் போக்குவதெந்நாள்கொலோ
சொல்லா யெதிராசா சூழ்ந்து (௫௧)

எந்தை = அடியேனுக்குத் தந்தையும் தாயுமான திருவரங்கர் = கோயிலையிட்டு நிரூபிக்கும்படியான பெரியபெருமாள், ஏரார்கருடன்மேல் = அழகு நிறைந்த பெரியதிருவடியின்மேல், வந்து = எழுந்தருளி, முகங்காட்டி = சரீரம் விடுகிறஸமயத்திலே அடியேனுக்கபேக்ஷிதமான கஸ்தூரி திருநாமத்தையும், முறுவலையுடைத்தான திருமுகமண்டலத்தையுங்காட்டி, வழிநடத்த = அர்ச்சிராதிமார்க்கத்தாலே நடத்திக்கொண்டுபோக, சிந்தைசெய்து = மநநம்பண்ணி, இப்பொல்லா வுடம்புதன்னை = இந்த ஹேயமான தேஹந்தன்னை, போக்குவதெந்நாள்கொலோ = தேவர்க்காகப் போக்கியருளுவதெந்நாளோ? எதிராசா = எம்பெருமானாரே! சூழ்ந்து = (அத்தை நான் கேட்டிருக்கும்படி) விசாரித்து, சொல்லாய் = அருளிச்செய்தருளீர்

(வ-ம) எனக்குத்தந்தையும் தாயுமாவாராய் கோயிலையிட்டுநிரூபிக்கும்படியான பெரியபெருமாள், (க) *அஞ்சிறைப்புள்பாகரான வாகாரந்தோன்ற ஸௌந்தர்யாதிகளால் மிக்கிருக்கிற பெரியதிருவடிமேல்கொண் டெழுந்தருளி ஶரீரவியோகஸமயத்திலே எனக்கபேக்ஷிதமான கஸ்தூரி திருநாமத்தையும், (உ) "நலங்கதிர்முத்தவெண்ணகைச்செய்யவாய்" என்று முறுவலை யுடைத்தான ஒளிமதிசேர் திருமுகத்தையுங்காட்டி யநுபவிப்பித்து (ங) *அரங்கத்துறையுமின்துணைவனான தாம் அர்ச்சிராதிமார்க்கத்தாலே கொண்டுபோய

(க) திருமொ ௪ (உ) பெரு-தி ௨-௭ (ங) தி-மொ.

(௧) "ந்யஸ்யாமி-த்வயி" யின்படியே வழிநடத்த மன்மபவாணி (௨) 'உன் சரணந்தந்தென் சன்மங்களையாயே" என்னும்படியே அதுக்கந்தர பாவியாகவிந்த ஹேயமான தேஹந்தன்னை தேவரீர் போக்கியருளுவது எந்நாள், அதைத் நான் தேறியிருக்கும்படி விசாரித்தருளிச்செய்தருளீர் (௩) 'ஶ்ரீஶே சதுர்வேதே-ப்ராணே சதுர்த்தசே வாஷே" என்று நாளவதியிட்டு, பின்பு (௪) 'அத்ரைவாரங்கம் ஸ்ருஷ்ட்ய- ஆருரோஹாத்ம ஹ்ருஷ்ட:' என்று ஹர்ஷபுஷ்டராயிருந்தாப்போலே அதுகொண்டு நான் ஹ்ருஷ்டனாய் இருக்கலாபத்து அன்றிக்கே சூழ்ந்தென்கிறது-பெரியபெருமாள் *அவாவறச்சூழ்ந்த படியாகவுமாம் (௫) 'சொல்லு நீயாமறியச்சூழ்ந்து" என்கிறவிடத்துக்கு விசாரித்தென்றிறே வ்யாக்யானம் பண்ணினார்கள் (௫௧)

(அ-கை) இனி நம்பேற்றுக்கு நாம் தாமதிக்கவேணுமோ? பெரியபெருமாள் எம்பெருமானாருக்குப் பண்ணியருளின பேறுகளெல்லாம் அவர் திருவடிகளில் ஸம்பந்தமுடைய நமக்குத் தா (௬) யப்ராப்தமாயிருப்பதொன்றன்றோவென்று அதைத் தாம் பெற்றாராகத் திருவுள்ளத்தோடே கூடிப் பரிதாயருளுகிறார்

இந்தவரங்கத் தினிதிருநீ யென்றரங்கர்
எந்தையெதிராசர்க்கீந்தவரம்—சிந்தைசெயில்
நம்மதன்றோ நெஞ்சமே நற்றந்தைசொம்புதல்வர்
தம்மதன்றோ தாயமுறைதான் (௬௦)

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்

அரங்கர்=பெரியபெருமாள், இந்த வரங்கத்து=இந்தக் கோயிலிலே, இனிதிருநீயென்று=('ஶ்ரீரங்கே ஸுகமாஸ்வ") என்கிறபடியே ஸுகமாகவிருமென்று, எந்தை யெதிராசர்க்கு=அடியேனுக்குப் பிதாவான எம்பெருமானார்க்கு, ஈந்தவரம்=ப்ரஸாதித்தருளின வரத்தை, சிந்தைசெயில்=விசாரிக்குமளவில், நெஞ்சமே=மனஸ்ஸே நம்மதன்றோ=நம்முடைய

(௧) வராஹசரமம் (௨) திருவாய்-௫-௮-௭ (௩) ரா-உயோ- (௪) ரா-யு- (௫)

தன்றோ? (அத்தைப்படியென்னில்) நற்றாதை = திருப்பாதிகப்பிதாவினுடைய, சொம் = சொத்துக்கள், தாயமுறைதான் (दाय) தாயப்ராப்தியாலே, புதல்வர்தம்மதன்றோ = புத்ரனுக்காகவேயன்றோ விருப்பது? (ஆகையாலே நம் ப்ராப்திக்கு நாமே யத்நிக்கவேண்டா எல்லாம் ஸித்தமாகவே யன்றோ இருக்கிறது? இனி அவரிடத்திலே ந்யஸ்தபரராயிருக்குமத்தனை

ஆக்கவித்தால் உபயவிபூத்யைஶ்வர்யத்தையும் பெரியபெருமாளாலே பெற்றுடையராய், அத்தாலே “ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டபமார்க்கதாயி” யாய், ப்ரபந்ந ஜநகூடஸ்தராயிருக்கிற வெம்பெருமானார் திருவடிகளிலே ருசிகார்யமாக, யதீந்த்ரப்ரவணரான ஜீயர் பண்ணியருளின ப்ராப்யப்ராப்தத்தை, அவரபிமாநாந்தர்பூத ரெல்லார்க்குமாய், அத்தாலே எம்பெருமானார் ப்ரஸாதத்தைப்பெற்று நித்யவிபூதியான பரமபதத்திலே நிரந்தரபகவதநுபவகைங்கர்ய நிரதராய் வாழப்பெறுவார்களென்று ஆர்த்தருஞ் சொல்லித் தலைக்கட்டியருளிற்று (௬௦)

(வ-ம)(க) “ద్వయమర్థానుసన్ధానేనసహ సదైవంవక్తా యావచ్ఛరీరపాతమ త్రైవ శ్రీరఙ్గే సుఖమాస్వ-த்வய மர்த்தாநுஸந்தாநேந ஸஹஸதைவம் வக்தா, யாவச்சரீரபாதமத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ” என்றருளிச்செய்து, அநந்தரம், “శరీరపాతసమయేతు ஸரீரபாதஸமயேது” என்று தொடங்கி ‘ నిత్యకిఙ్కరో భవిష్యసి, మా తేభూదత్రసంశయః-ఇతి మయైవహ్యుక్తమ్-అతస్త్వం తవ తత్త్వతో మత్ జ్ఞానదర్శనప్రాప్తిషు నిస్సంశయస్సుఖమాస్వ-நித்யகிங்கரோபவிஷ்யஸி, மாதே பூதத்ரஸம்ஶய:-இதி மயைவஹ்யுக்தம்-அதஸ்த்வம் தவதத்வதோமத்ஜ்ஞாநதர்ஶநப்ராப்திஷு நிஸ்ஸம்ஶயஸ்ஸுகமாஸ்வ” என்னும்படியாக தேஹபாதந்தொடங்கி கைங்கர்யபர்யந்தமாக வுண்டான பேறுகளெல்லாம், நாமே தலைக்கட்டித்தருகிறோ மென்று, பெரியபெருமாள் நமக்கு ஜநகரான எம்பெருமானார்க்கு வழங்கியருளினவர்த்தை நிரூபிக்கில், அவர்க்கவர் ஜந்யரான நம்மதன்றோ மங்கலே!,

அத்தைப்படி யென்னில்,-திருப்பாதிகப்பிதாவானவனவஸ்வம் தாயப்ராப்தியாலே புத்திரனுக்காயே யன்றோயிருப்பது? ஆகையாலே நம்ப்ராப்திக்கு நாமே யத்நிக்கவேண்டா? எல்லாம் ஸித்தமாயே யன்றோ யிருக்கிறது? இனி அவரிடத்திலே ந்யஸ்தபரராயிருக்குமத்

(க) ஶரணாகதிகத்யம்

தனை. ஆகவித்தால் உபயவிபூதியைச்வர்யத்தையும், பெரியபெருமாளாலே பெற்றுடையராய், அத்தாலே "ஶ்ரீவிஷ்ணுலோகமணிமண்டபமார்க்கதாயி-ஶ்ரீவிஷ்ணுலோக மணிமண்டபமார்க்கதாயிபாய், ப்ரபந்நஜநகூடஸ்தராயிருக்கிற வெம்பெருமானார்திருவடிகளிலே ருசிகார்யமாக, யதீந்த்ரப்ரவணரான ஜீயர்பண்ணியருளின ப்ராப்யப்ரார்த்தனை-அவரபிமாநாந்தர்ப்பூதரெல்லார்க்குமாய், அத்தாலே எம்பெருமானார் ப்ரஸாதத்தைப்பெற்று, நித்யவிபூதியிலே நிரந்தரபகவதநுபவகைங்கர்யநிரதராய் வாழப்பெறுவார்களென்றவர்த்தஞ்சொல்லித் தலைக்கட்டிற்றாயிற்று.

எதிராசா! எதிராசா! என்று ஸம்போதிக்கிறதெல்லாம் தமக்குமவர்களோடொத்த ப்ராப்தியுண்டாகையாலும், "யஶ்ச யஶ்ச ப்ரதிஶ்ரு-யதயஸ்ஸந்த்கஸத்வா:" என்கிறபடியே யதிகளுக்கு நாதராகையாலும், அத்தை யடிக்கடி யாதரித்தருளிச்செய்கிறார்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

ஆர்த்திப்ரபந்தவ்யாக்யானம் முற்றிற்று,



## மணவாளமாமுனிகள் வாழி திருநாமம்

இப்புவியில் அரங்கேசர்க்கு ஈடளித்தான் வாழியே
எழில் திருவாய்மொழிப்பிள்ளை இணையடியோன் வாழியே
ஐப்பசியில் திருமூலத்து அவதரித்தான் வாழியே
அரவரசப்பெருஞ்சோதி அனந்தனென்றும் வாழியே
எப்பொழுதும் ஸ்ரீசைலமேத்தவந்தோன் வாழியே
ஏராரும் எதிராசரெனவுதித்தான் வாழியே
முப்புரிநூல் மணிவடமும் முக்கோல் தரித்தான் வாழியே
மூதரியமணவாள மாமுனிவன் வாழியே

## நாள் பாட்டு

செந்தமிழ்வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்
சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசுபொலிந்திடுநாள்
மந்தமதிப்புவி மானிடர் தங்களை வானில் உயர்த்திடுநாள்
மாசறுஞானியர் சேர் எதிராசர்தம் வாழ்வு முளைத்திடுநாள்
கந்தமலர்ப்பொழில் சூழ் குருகாதிபன் கலைகள் விளங்கிடுநாள்
காரமர்மேனி அரங்கநகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
அந்தமில்சீர் மணவாளமுனிப்பரன் அவதாரஞ் செய்திடுநாள்
அழகு திகழ்ந்திடும் ஐப்பசியிற் திருமூலந்தனிநாளே

---